# கல்வெட்டுக் கருவூலம்







ச. சாம்பசிவனார், எம்.ஏ.,
தமிழ் விரிவுரையாளர்
அஞ்சல்வழிக் கல்வித்துறை
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை.





வளவன் வெளியீடு
59, மேலாவணி மூலவீதி
மதுரை-625 001

# கல்வெட்டுக் கருவூலம்



ச. சாம்பசிவனார், எம்.ஏ.,
தமிழ் விரிவுரையாளர்
அஞ்சல்வழிக் கல்வித்துறை
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை.

வளவன் வெளியீடு
59, மேலாவணி மூலவீதி
மதுரை-625 001

சிவனார் பதிப்பு
முதற்பதிப்பு : செப்டம்பர் : '79

விலை ரூ. 5—00





| | | |
|---|---|---|
| *Author* | : | S. SAMBASIVANAR, M. A., |
| *Title* | : | Kalvettuk Karuvoolam |
| *Language* | : | Tamil |
| *Contents* | : | A short sketch about inscriptions |
| *Edition* | : | First (Oct. '79) |
| *Number of Copies* | : | 1000 |
| *Pages* | : | iv+102=106 |
| *Price* | : | Rs.5 |
| *Size* | : | 8×12.5 cms |
| *Letter used* | : | 10 pt. |
| *Paper used* | : | White Printing Paper 10.9.kg. |
| *Binding* | : | Card board |
| *Copy right* | : | S. Sambasivanar |
| *Printed at* | : | Arutpa Achakam, Madurai-1 |
| | : | (Phone 32029) |
| *Publishers* | : | VALAVAN VELIYEEDU<br>59 West Avani Moola St.,<br>MADURAI - 625 001. |

அருட்பா ◯ மதுரை

## முன்னுரை

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரியாச் சொல்" (குறள் : 955)

என்ற குறளுக்கு உரைகூறவந்த பரிமேலழகர், "பழங்குடி - தொன்று தொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார். தொன்று தொட்டுவருதல் சேர சோழ பாண்டிய ரென்ருற் போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்" என்கின்ருர். இத்துணைப் பெருமை பெற்ற நம் முன்னேர்களின் முறை-யான வரலாறு நமக்குத் தெரியாது! இக்குறையினை ஓரளவு போக்குவன 'கல்வெட்டுக்கள்'! இக்கல்வெட்டுக்கள் எவ்வாறு தோன்றி வளர்ச்சி பெற்றன என்றறிய வேண்டாமா? நம் நாட்டினை ஆண்ட மாண்புறு மன்னர்கள் (காவலர்கள்), ஊர்ச்-சபைகள் ஆற்றிய உயர்ந்த பணிகள், சமயங்களின் நிலைகள், இலக்கியச் சிறப்புக்கள், அளவை அணிகலன்களின் பெயர்கள், சுவையான நிகழ்ச்சிகள், நடைநயங்கள் ஆகியவற்றையெல்-லாம் கல்வெட்டுக்கள் கழறுகின்றனவாதலின் 'கல்வெட்டு-ஓர் அரிய கருவூலம்' எனலாமன்றே? இந்நூலின்கண், இப்பகுதிகள் ஓரளவு இயம்பப்பெற்றுள்ளன.

இதனை, மதுரைக் காமராசர் பல்கலைக் கழக அஞ்சல்வழிக் கல்வித் துறையில் 'தமிழ் முதுகலை' மாணவர்க்குப் பாட-நூலாகத் தேர்தெடுத்த பல்கலைக் கழகப் பாடநூற் குழுவினர்க்கு என் நன்றி உரியது. அஞ்சல்வழிக் கல்வித் தமிழ்த்துறைப் பேராசிரியர் டாக்டர் திரு தமிழண்ணல் அவர்களின் தூண்டுதலினுற்ருன் இந்நூலினை யான் வெளிக் கொணர நேர்ந்தது. அன்னுர்க்கு எங்ஙனம் கைம்மாறு செய்யவல்லேன்!

"தாரகம் எல்லாம் தமிழே மொழியும்
ஏரகத் துறையும் எழிலார் முருகன்
சீரடி பரவிச் செந்தமிழ் நூலைப்
பாரோ ரறியப் படைத்தனன் யானே!"

தமிழுலகு இதனை வரவேற்குமென நம்புகின்றேன்.

வாழ்க தமிழ்!

அன்பன்

ச. சாம்பசிவன்

மதுரை - 1
29-9-1979

# உள்ளுறை

# கல்வெட்டுக் கருவூலம்

## 1

### தோற்றுவாய்

ஆதி பகவனின் இயல்பை இயம்பவந்த திருவள்ளுவர்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"[1]

என்று குறிப்பிடுகின்றார். "இவ்வுலகு ஆதிபகவனாகிய முதலை உடைத்து" என்று மொழியவந்தவர், "எழுத்துக்கள் எல்லாம் அகரமாகிய முதலையுடையன 'அதுபோல' என்னும் அழகிய உவமையினை எடுத்தாள்கின்றார்.

தொல்காப்பியப்பொருளதிகாரத்து 'உவமையியலை' விளக்க வந்தவிடத்து 'உரையாசிரியர்' இளம்பூரணர், இதனாற்பயன் என்னை மதிப்பதோவெனின், புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கின்பம் பயத்தலும். 'ஆப் போலும் ஆமா' என உணர்த்தியவழி, அதனைக்காட்டகத்துக் கண்டான் முன்கேட்ட ஒப்புமை பற்றி இஃது 'ஆமா' என்று அறியும். 'தாமரை போல் வாள்முகத்துத் தையலீர்' என்றவழி அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும்"[2] என்று கூறுவர்.

இவ்வகையில் நோக்கினால், 'அகர முதல வெழுத்தெல்லாம்' என்பது, 'புலன் அல்லாதன புலனாதல்' பற்றி எழுந்த

உவமை எனல் சாலும்! 'தெரிந்த ஒன்றினைக் கொண்டு தெரியாத ஒன்றினை விளக்குவதே' உவமையின் இலக்கணமாகும். "காணப்பட்ட உலகாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின் 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என உலகின் மேல் வைத்துக் கூறினார்"[3] என்ற பரிமேலழகர் உரையும் ஈண்டு உன்னத்தக்கது.

வள்ளுவர் காலத்திலேயே, 'எழுத்துக்களைப் பற்றியும், அவ்வெழுத்துக்கள் எல்லாம் 'அகர'த்தை முதலாக உடையன பற்றியும் தமிழ்ப் பெருமக்கள் மிக நன்றாக அறிந்திருந்தனர் என்பதையே இவ்வுவமை காட்டி நிற்கின்றது! இன்னும் ஆராயப் புகுந்தால் வள்ளுவருக்கு முன்னர்த் தோன்றிய ஒல்காப் பெரும் புகழத் தொல்காப்பியரே,

> "எழுத்தெனப் படுப
> அகர முதல் னகர இறுவாய்"[4]

என்று மொழிந்தமையும் உணரலாம். தமிழின் முதல் எழுத்தாகிய 'அகர'த்தையும் ஈற்றெழுத்தாகிய 'னகர'த்தையும் கூறி இடைப்பட்ட எழுத்துக்களை அவர் கூறாமைக்கு யாது காரணம்? இவ்வெழுத்துக்கள் அனைத்தையுமே தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர் என்பதனாலேயாம்!

எண்ணையும் எழுத்தையும் 'கண்' எனக் காத்து நின்றவர் கன்னித் தமிழர் என்பதை,

> "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
> கண்ணென்ப வாழு முயிர்க்கு"[5]

என்ற குறட்பாவே சான்று பகரும்

'எழுதப் படுதலின் எழுத்து எனப்பட்டது. இஃது இரு வகைப்படும். (1) ஒலி எழுத்து (2) வரி எழுத்து. "காதாற் கேட்டு மனத்தால் உணரப்படுவது ஒலிஎழுத்து, கோடுகளால் எழுதப்படுவது வரிஎழுத்து". இத்தகு 'வரி எழுத்துக்கள்' தொல்காப்பியர் கால முதற்கொண்டே இருந்து வருவன என்-

பதை எண்ணுங்கால் நமதுள்ளம் பெருமிதத்தால் துள்ளுகின்றது!

இவ் எழுத்துக்களைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் பனை ஓலைகளில் எழுதினர்; செப்பேடுகளில் வரைந்தனர்; கல்லில் வெட்டினர். கல்லில் வெட்டப்பட்ட எழுத்துக் 'கல்வெட்டு' எனப்பட்டது.

தமிழகத்திற் காணப்படும் கல்வெட்டுக்கள் பலப்பல. அவற்றுள் மன்னர்தம் மாண்பு மொழியலாம்; ஊர்ச்சபைகளை உணரலாம்; கோயில்களைத் தெரியலாம்; சமயங்களைச் சொல்லலாம்; அளவை அணிகலன்களை அறியலாம்; இலக்கியம் இயம்பலாம்; அரிய சொற்களை அகழ்ந்தெடுக்கலாம்; நடை நயம் நன்கெடுத்துக் காட்டலாம். இவ்வகையில் 'கல்வெட்டு — ஓர் அரிய கருவூலம்' எனும் உண்மையைக் கண்டு தெளியலாம்! வம்மின்; கருவூலம் காண்மின்; 'கனிதமிழர் பெருமை' எனும் செல்வம் பெறுமின்!



## 2

## கல்வெட்டுக்கள் - தோற்றமும் வளர்ச்சியும்

எங்காவது பழமையான கோயில் ஒன்றினுள் நுழைவோமானால் ஆங்குக் 'கல்வெட்டு' அமைந்திருப்பதைக் காணலாம்; மலைப்பாறைகள், கற்றூண்கள், படுக்கைகள், நடுகற்கள் முதலானவற்றிலும் 'கல்வெட்டுக்கள்' உண்டு! இக்காலத்தும் புதிது புதிதாகக் கட்டப்படும் பொது நிலையங்கள், பாலங்கள், கட்டிடங்கள் முதலானவற்றில் பளிங்குக் கற்களில் வெட்டப்படும் கல்வெட்டுக்களை நாமறிவோம்! இத்தகு கல்வெட்டுக்கள், எப்படித் தோன்றின, எப்படி வளர்ந்தன என்று அறிய நம் மனம் அவாவுகின்றது!

### கல்லில் வெட்டக் காரணம் :

இன்று, தாளில் எழுப்படும் எழுத்து, முன்னர் பனை ஓலைச்சுவடிகளில் எழுத்தாணியால் எழுதப்பட்டது. அங்ஙனம் எழுதப்பட்ட ஆயிரக்கணக்கான ஏட்டுச் சுவடிகளை இன்றும் தமிழ்நாட்டிற் காணலாம். எழுத்துக்கள், என்றும் அழியாமல், அழிக்கப்படாமல் இருத்தற்பொருட்டுச், செப்புத் தகடுகளில் எழுதிவைத்தனர் சிலர். அச் செப்புத் தகடுகள், ஒருகால் எவராலேனும் மறைக்கப்படலாம் என்ற எண்ணத்தால், அவற்றைவிட உறுதியாகவும், நிலையாகவும், பிறரால் எளிதில் மறைக்கப்படாமலும் இருத்தற் பொட்டு மலைக் குகைகள்,

பாறைகள், நடுகற்கள், கோயிற் கற்சுவர்கள் முதலானவற்றில் எழுத்துக்களை வெட்டலாயினர். அவ்வாறு வெட்டப்பட்ட எழுத்துக்களே 'கல்வெட்டுக்கள்' அல்லது 'சிலாலேகைகள்' எனப்பட்டன.

இலக்கண, இலக்கியத்தில் :

'போர்க் களம் புகுதல்' என்பது தமிழ்நாட்டு வீரர்க்கு ஓர் அலகிலா விளையாட்டு! 'போர்' என்ற சொற் கேட்ட அளவானே, அவர்களுடைய பொருப்பன்ன புயங்கள் விம்மிப் புடைக்கும். காற்றில் அசைந்தாடும் 'முரசொலி' கேட்ட-மாத்திரத்தானே, ஆர்த்தெழுவர் ஆற்றல் சோர்மறவர். 'போர்க் குறிக்காயமே புகழின் காயம்' எனப் பெருமிதம் கொள்வர். போர் முறையிலும் அறநெறியினையே கடைப்பிடிக்கும் பேராண்மையும் அவர்கள்பாலிருந்தது.

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்...
பெண்டிரும் பிணியுடை யீரும்...
நும்மரண் சேர்மின்"[6]

என முன்னதாகவே முறையோடு விளம்பிப் போர் செய்ய முற்படுவர். போர்க்களத்தில் அஞ்சி ஓடுகிறவரை அதட்டி ஓடுக்குவதும், அன்னோர்தம் புறமுதுகில் போர்க் கருவி ஓச்-சுவதும் அறப்பண்பன்று என்று கொண்டனர் புறமுகில் குத்துவதும் இழிவு; அங்ஙனம் குத்தப்பட்டுப் புண்பெறுவது அதனினும் இழிவு என்றே கருதினர். 'புறப்புண் நாணி வடக்கிருந்த'[7] கோப்பெருஞ் சோழன் வரலாறு நாமறிந்ததே. அவ்வாறே போர்க்களத்தில் படைக்கருவி இழந்த வீரனொரு-வன்பால் போருடற்றுவதும் இழிவென்றே எண்ணினர். வெறுங்-கையோடு நின்ற இலங்கை வேந்தனை நோக்கி இராமபிரான்,

'இன்றுபோய்ப் போர்க்கு நாளைவா'[8]

என நவின்றான் எனக் 'கல்வியிற் பெரிய கம்பர்' கழறுவதும் நமது தமிழ்ப் பண்பை ஒட்டியதன்றோ?

போரில் புறமுதுகு காட்டாமல், விழுப்புண்பட்டு மாண்டு மடிந்த மறவர்க்கு 'வீரக்கல்' நட்டு வழிபாடு செய்தனர் பண்டைத் தமிழர்! அக் கல்லில் அவ்வீரர்தம் வெற்றிச் செயலும், வாழ்வியலும் பொறிக்கப்படும்.

''காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு புணர''[9]

என்னும் தொல்காப்பிய நூற்பா, இவ்வுண்மையைச் சுட்டும். பின்னர் வந்த 'புறப்பொருள் வெண்பாமாலை' என்ற இலக்கண நூலிலும்

''கன்னின்ரு னெந்தை கணவன் களப்பட்டான்
முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்''[10]

''மாலை துயல மணிபெறிந்து மட்டுகுத்துப்
பீலி அணிந்து பெயர்பொறித்து—வேலமருள்
ஆண்டக நின்ற அமர்வெய்யோற் கிஃதென்று
காண்டக நாட்டினர் கல்''[11]

எனக் குறிக்கப்படுவது ஈண்டு நோக்கத்தக்கது.

''ஆடவர்,
பீடும் பெயரும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்''[12]

''அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லும்''[13]

''என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர்''[14]

என்ற சங்க இலக்கியச் சான்றுகளும் மேற்கூறிய கூற்றுக்கு உறுதுணை புரிகின்றன. கி. பி. 7 அல்லது 8ஆம் நூற்றுண்டு எனக் கருதப்படும் 'திருவாரூர் மும்மணிக் கோவை'யிலும்

"பட்டோர் பெயரும் ஆற்றலு மெழுதி
நட்ட கல்லும் மூதூர் நத்தமும்"[15]

என்ற குறிப்புக் காணப்படுகின்றது.

எனவே, வீரப்போர் புரிந்து, விழுப்புண்பட்டு மாண்டுபோன வீரர்க்கு 'நடுகல்' நடுவதும், அக்கல்லில் அன்னவர்தம் மாண்பினைப் பொறிப்பதும் தொன்று தொட்டு வந்த தமிழர்தம் பழக்கம் என்பதை உணரமுடிகின்றது! கல்வெட்டுத் தோன்றுவதற்கு இதுவே மூலகாரணம்!

**வளர்ந்த விதம் :**

தொடக்க காலத்தில், இக்கல்வெட்டுக்களில் இறந்துபோன வீரர்களின் வெற்றியைமட்டுமே குறித்து வந்தனர். அறுபதுக்கும் மேற்பட்ட இத்தகு நடுகற்களைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கண்டுபிடித்துள்ளது.[16] நம் தமிழகத்தே வாழ்ந்து வந்த பௌத்த, சமணத் துறவியர் அரிய நோன்பியற்றி உயிர்துறந்தனரன்றோ? அத்தகையோர், வாழ்தற்கிடனாக அமைந்தவை, பெரும்பாலும் மலைக்குகைகளே எனலாம். அன்னாரின் அருமை மாணவர்கள், அத்தகு மலைக் குகைகளிலும், பாறைகளிலும் தங்கள் தங்கள் ஆசிரியர்களைப் பற்றிய செய்திகளைப் பொறிக்கலாயினர். இத்தகு கல்வெட்டுக்களைச் 'சமாதிச் சாசனங்கள்' என்று கூறுவர். செஞ்சியின் ஒரு பகுதியில் உள்ள திருநாதர் குன்றிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கழுகுமலையிலும், மதுரைமாவட்டத்தில் உள்ள யானைமலையிலும், திருச்சிராப்பள்ளிக் குன்றிலும் இத்தகு கல்வெட்டுக்களை இன்றும் காணலாம்.[17]

இக் கல்வெட்டுக்கள், கி. பி. 4-ஆம் நூற்றுண்டு முதல் 9-ஆம் நூற்றுண்டுவரை தமிழ் நாட்டின் வடபகுதியை ஆண்ட பல்லவர்கள் காலத்தில் வளர்ச்சியுற்றன.[18] பல்லவர்களுக்குப்பின் ஏறத்தாழ 430 ஆண்டுகள், சோழர்கள் தஞ்சையிலிருந்து தமிழ்நாட்டை ஆட்சிபுரிந்தனர். அவர்கள் காலத்தில், சிறப்பாக முதலாம் இராசராசன் காலத்தில், வெற்றி மேம்பாடு குறிக்-

கும் 'மெய்க் கீர்த்திச் சாசனங்கள்' தோன்றலாயின. சோழர்களைப் பின்பற்றிப் பாண்டியர்களும் இத்தகு மெய்க்கீர்த்திச் சாசனங்களை வெட்டலாயினர்.

இவ்வாறே, தமிழகத்தில் உள்ள சைவ வைணவத் திருக்கோயில்களில், இறைவனுக்குச் செய்யப்படும் பூசை, வழிபாடு, விழா முதலாயின பற்றியும், கோயிலுக்கு அளிக்கப்படும் அணிகலன்கள், நிலங்கள் ஆகியன பற்றியும் கல்லில் வெட்டலாயினர். அரசர்களும், அரசியல் அதிகாரிகளும், பொதுமக்களும் செய்துள்ள தனித்தனி அறச்செயல்களும் கல்லில் பொறிக்கப்பட்டன.

இங்ஙனம் "நடுகல்'லில் தொடங்கிய இக் கல்வெட்டுப் படிப்படியாய் வளர்ந்து, இன்று திருக்கோயிற் சுவர்களில் மட்டுமன்றிக் கல்விச்சாலை போன்ற பொது நிலையங்களிலும் காட்சியளிக்கும் தன்மைகளைக் காணுகின்றோம்.

எழுத்து :

"தமிழ்நாட்டில் கிடைத்துள்ள எழுத்துக்களில் காலத்தால் முந்தியுள்ள எழுத்து 'பிராமி'யே யாகும். இங்குக் கிடைக்கும் பிராமி எழுத்துக்களுக்கும் வட இந்தியாவில் கிடைத்துள்ள பிராமி எழுத்துக்களுக்கும் வரி வடிவத்தில் சிறு வேற்றுமை காணப்படுகிறது. ஆகவே தமிழ் நாட்டில் கிடைக்கும் எழுத்துக்களைத் 'தாமிழி' என்று கூறுகின்றனர்."[13] அத்தகைய எழுத்துக்கள் தமிழ்நாட்டில் கி. மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து காணப்படுகின்றன. இவ்வெழுத்துக்கள் பெரும்பாலும் மலைக் குகைகள், சமணப் படுக்கைகள் ஆகியவற்றில் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழகத் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் செய்த அகழ்வாராய்ச்சியின் போது. 'தாமிழி' எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. எனவே, பண்டைத் தமிழகத்தே, தமிழ்ப்பெரு மக்கள் கையாண்டு வந்தனவாகவும், இப்போதுள்ள தமிழின் முந்தைய வரிவடிவமாகவும் இவ்வெழுத்துக்கள் இருந்திருக்க வேண்டும் என்பது போதரும்!

கி. மு. 3ஆம் நூற்றாண்டுமுதல் கி. பி. 3ஆம் நூற்றாண்டு வரை, கல்வெட்டுக்களில் 'தாமிழி' காணப்படுகின்றன. பின்-

னர் இவற்றில் சில உருவமாற்றங்கள் தோன்றலாயின. இவ்விளைவால் 'தாமிழி'லிருந்து 'தமிழ்', 'வட்டெழுத்து' என்ற இருபிரிவுகள் கிளைக்கலாயின. 'அரச்சலூர்க் கல்வெட்டு' இதற்குச் சான்று என்பர் டாக்டர் இரா நாகசாமி.[20] இங்குச் சுட்டப்படும் 'வட்டெழுத்து' என்பது தமிழினின்றும் வேறுபட்டதன்று; தமிழ் மொழியை எழுதுவதற்கு வழங்கிய வட்ட வடிவமான ஒருவகைத் தமிழ் எழுத்துக்களே 'வட்டெழுத்து' எனப்படும்!

தமிழ் நாட்டில் வடமொழியை எழுதத் தொன்றுதொட்டு வழங்கிய எழுத்தைக் 'கிரந்தம்' என்று குறிப்பிடுவர். இத்தகு 'கிரந்தமு'ம் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது. பல்லவர்கள் காலத்திலிருந்தே அஃதாவது கி. பி. 3-ஆம் நூற்றுண்டிலிருந்தே 'கிரந்த' எழுத்துச் செல்வாக்குப் பெற்றது எனலாம். தமிழ்மொழியில் எழுதப் பெற்ற சாசனங்கள்கூடக் கிரந்த எழுத்துக்களும், வடமொழியும் கலந்து எழுதப் பெற்றுள்ளன. சில செய்யுள் வடிவில் உள்ளன; சில உரைநடையில் உள்ளன; இன்னுஞ்சில, இவை இரண்டும் கலந்து உள்ளன.

மேற்கூறிய தாமிழி, வட்டெழுத்து, பிராமி முதலாயின தவிர நம் தமிழகத்தில் 'தேவநாகரி', தெலுங்கு, கன்னடம், மராட்டி முதலான பிறமொழிக் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன.[21]

அமைப்பு :

கல்வெட்டுக்களின் அமைப்பினைப் பொதுவாக நோக்குமிடத்து, அஃது ஐந்து பகுதிகளைக் கொண்டதாக இருத்தல் காணலாம். அவை : மங்கல வாசகம், கல்வெட்டுத் தோன்றிய காலம், கல்வெட்டுச் செய்தி, கையெழுத்துக்கள், ஓம்படைக் கிளவி. இவ்வைந்தில் ஒன்றிரண்டு குறைந்துள்ள கல்வெட்டுக்களும் உண்டு.

இவற்றுள் 'மங்கல வாசகம்', கல்வெட்டின் தொடக்கத்தில் காணப்படுவது. நம் தமிழ்நாட்டில், எதனை எழுதுவதா-

னுலும் மங்கலச் சொல்லோடு தொடங்கி எழுதுவதை ஒரு மரபாகக் கொண்டுள்ளனர். அம்முறைப்படி இக் கல்வெட்டுக்களிலும். 'மங்கலம் உண்டாகட்டும்' என்ற பொருளில் 'ஸ்வஸ்திஸ்ரீ' என்ற தொடர், முதலில் காணப்படுகின்றது.

இதனையடுத்துக் 'கல்வெட்டுத் தோன்றிய காலம்' குறிக்கப்பட்டிருக்கும். அஃதாவது அப்போது ஆட்சிபுரிந்த மன்னனையும், அவனது ஆட்சி ஆண்டையும் குறிப்பது வழக்கம். ஒருசிலவற்றில், ஆண்டோடு 'நாளும்' காணப்படுகின்றது. மேலும், அவ்வரசனது ஆட்சியாண்டுடன் அதற்குச் சமமான கலியுக ஆண்டு, கொல்லம் ஆண்டு முதலான பிற ஆண்டும் குறிப்பிடப்படுவதுண்டு! இங்ஙனம், ஆண்டினைக் குறிக்கும் போது அவ்வரசனின் 'மெய்க்கீர்த்தி'யும் சேர்த்துப் பொறிக்கப்படும். ''திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்.........கோராச கேசரி வர்மரான உடையார் ஸ்ரீராசராசதேவர்க்கு யாண்டு ...(29) ஆவது''[12] என வரும் கல்வெட்டு வாசகம், இவ்வுண்மையைப் புலப்படுத்தும்.

'கல்வெட்டுத் தோன்றிய காலப்பகுதிக்குப்பின், கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட காரணத்தை விளக்கும் பகுதி காணப்படும். 'இன்ன அரசன், இன்ன ஊரில் இன்ன இடத்தில் அமர்ந்து கொண்டு இன்னின்ன அறங்களைச் செய்தான்' என்றோ 'இந்த ஊர்ச்சபையார் இந்தக் கோவிலுக்கு இத்தகைய நிலங்களைத் தானமாகக் கொடுத்தனர்' என்றோ, இவை போன்ற பிற செய்திகளோ இப்பகுதியில் இடம் பெறும். இதனையே 'கல்வெட்டுச் செய்தி' என்கிறோம்.

''குலோத்துங்க சோழவள நாட்டுக்
குன்றத்தூர் நாட்டு மணிமங்கலமான
பாண்டியனை இருமடிவென்று கொண்ட
சோழ சதுர்ப்பேதி மங்கலத்து மகாசபையோம்
எழுத்து.
........ ...... ......... .........
ஆகக்குழி ஆயிரத்தைம்பதும் அமாவாசிப்புறம்

சந்திராதித்தவற் செல்வதாக இறைவழுத்துகைக்குக்
கிரயமாகஇவர்பக்கல் ஸபையோமாக வேண்டும்
பொன்கொண்டு இந்நிலத்துக்கு வந்தஇறை
ஸபையோமே இறுக்கக் கடவோமாக இசைந்து
இறைஇழிச்சுக் குடுத்தோம்.........."[23]

என்பதை இதற்குச் சான்ருகக் காட்டலாம்.

நான்காவதாகக் கல்வெட்டுச் செய்திகளையடுத்து, அவ்வறச் சொற்களைச் செய்தவர்களின் கையெழுத்துக்களும், அவற்றிற்குச் சான்ருக இருந்தோர் கையெழுத்துக்களும், அவற்றை எழுதிய ஊர்க்கரணத்தான் கையெழுத்தும், அவற்றைக் கல்லில் பொறித்தான் கையெழுத்தும் பொறிக்கப்பட்டிருக்கும். இவற்றையே 'கையெழுத்துக்கள்' என்று கூறுகின்ருேம்.

"இப்படிக்கு அழகியப் பெருமாள் எழுத்து,
இப்படிக்கு நாட்டுக் கணக்கு மயிலேறும்
பெருமாள் சிவஞான தேவன் ஆன உருபநாராயண
மூவேந்த வேளான் எழுத்து"[24]

என்று வருவது காணலாம். இனி, இத்தகைய கையெழுத்துக்களின்றி வெட்டப்பட்ட கல்வெட்டுக்களும் உண்டு!

கல்வெட்டுக்களின் இறுதியில் காணப்படுவது 'ஓம்படைக்கிளவி' ஆகும். 'பாடாண்திணை' பற்றிப் பேசவந்த தொல்காப்பியர் 'காலங் கண்ணிய ஓம்படை'[25] என்பது பற்றிக்குறிப்பிடுகின்ருர். 'இதனைப் பாதுகாக்க வேண்டும்' என்ற பொருளில் வருவது 'ஓம்படை' என்பது தெளியலாம். கல்வெட்டின் இறுதிப் பகுதியும் இத்தகு பொருளில்தான் ஆளப்படுகின்றது. 'இது பன்மாஹேஸ்வர ரக்ஷை'[26], 'இது வைஷ்ணவர் ரக்ஷை',[27] 'இதனை ரக்ஷித்தாரடி இரண்டும் என்முடி மேலின ஸ்வஸ்தி'[28] போன்ற தொடர்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. சிலவற்றில் இத்தகு 'ஓம்படைக் கிளவிகள்' இல்லாமலிருத்தலும் உண்டு! சிலவற்றில், இவ் ஓம்படைக் கிளவியுடன், "இத்தர்மத்துக்கு அஹிதம் நினைத்தார் கங்கை

யிடை, குமரியிடை எழுநாற்றுக் காதத்திலுஞ் செய்தார் செய்த பாவத்துப் படுவார்'', ''இத்தர்மத்துக்கு யாதாமொருவன் அஹிதம் நினைத்தால் திருவேங்கட முடையானுக்குத் துரோகியுமாகி தன்னுடைய மாதாபிதாவையும் தனது குருவையும் கங்கைக் கரையிலே வதைத்த தோஷத்திலே போகக் கடவானாகவும்'', 'மாறுவான் சிவதுரோகியுமாய், மோவாய்புக்கு முலையெழுந்தானுமாய், ஒருவனுக்கும் ஒருத்திக்கும் பிறந்தானு மல்லானாய், கோமாங்கிசத்தைப் புசிப்பானுமாய், கங்கையிடை குமரியிடை குரால் பசு கொன்றான் பாவம் கொள்வான்'' போன்ற தொடர்களும்[29] காணப்படுகின்றன.

தொண்டாற்றிய தூயோர்:

'இந்திய நாட்டில் இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுக்களில் மூன்றில் இரண்டு பங்கு நம் தமிழகத்திலிருந்து படியெடுக்கப்பட்டன'[30] என்றறியும்போது கல்வெட்டின்பால் பண்டைத் தமிழர்கள் கொண்டிருந்த ஆர்வம் புலனாகின்றது.

தமிழ்நாட்டில் பெரும்பாலான கல்வெட்டுக்கள், திருக்கோயில்களிலேயே காணப்படுகின்றன. அக்காலத்தில், இத்தகைய கல்வெட்டுக்களைப் பேணிக் காப்பதை ஒவ்வொருவரும் தத்தம் கடமை என்று கருதி வந்தனர். கோயில் பழுதடைந்து அதனைப் புதுப்பிக்க நேர்ந்தாலும், பழைய கல்வெட்டுச் சிதைந்து போனாலும், ஆங்குள்ள கல்வெட்டை அப்படியே 'படி' (copy) எடுத்துக் கொண்டு, முன்போலவே அதனைப் பதித்தல் அல்லது புதிய கல்வெட்டைப் பொறித்தல் ஆகிய செயல்களை மேற்கொள்வர். ஆங்ஙனம் செய்யுங்கால் அரசனது ஆணை பெற்றோ, அரசனின் அலுவலர்கள் முன்னிலையிலோ செய்தாக வேண்டும்! இஃது அக்காலத் தமிழ் வேந்தர்களின் ஆணை! இவ்வாறு இரண்டாம் முறையாக வரையப் பெற்ற கல்வெட்டுக்கள், திருமழபாடி, திருவிடை மருதூர், ஆடுதுறை, திருவையாறு, திருப்புகலூர் முதலான ஊர்களில் இக்காலத்தும் காணலாம்.[31]

இதுகாறும் கிடைத்துள்ள தமிழ்க் கல்வெட்டுக்களில் மிகவும் பழமை வாய்ந்தது, மதுரை மாவட்டத்தைச் சார்ந்த மீனாட்சி

புரம் (அரிட்டாபட்டி) கல்வெட்டாகும் "இது, கி. மு. 3, 2 -ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது; 'பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தது' என்பர் டாக்டர் இரா. நாகசாமி.[32] "கல்வெட்டுக்களில் மிகப் பெரியது, செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள திருமுக்கூடல் வீரராசேந்திர சோழன் காலத்துக் கல்வெட்டு" என்பர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்.[33]

அரிய வரலாற்றுக் கருவூலங்களாகிய இத்தகைய கல்வெட்டுக்களைக், காலம் செல்லச் செல்லத் தமிழ்ப் பெருமக்கள் மறக்கலாயினர்; 'பேணிக் காத்தல் பெருங்கடன்' என்பதை மறந்ததோடு மட்டுமன்றி, அவற்றை அழிக்கவும் தொடங்கிவிட்டனர். கோயில்கள் பாழடைந்து போனமையினுலும், பாதுகாக்காமையினுலும், வேண்டுமென்றே சிதைத்தமையாலும், அழிந்து போன கல்வெட்டுக்கள் ஏராளம் ஏராளம்! இந்நிலையிலும், தமிழ்ப் பெரும் புலவர்களிற் சிலர் திருக்கோயிற் கல்வெட்டுக்களைத் தமக்குத் தெரிந்தவாற்றுன், அவ்வப்போது 'செந்தமிழ்' 'தமிழ்ப் பொழில்' முதலான திங்களேடுகளில் எழுதிவந்தமை போற்றத்தக்கது!

"இந்திய நாட்டில் உள்ள கல்வெட்டுக்களை எல்லாம் முதலில் படி எடுத்து, ஒழுங்கு படுத்தவேண்டும் பிறகு வரலாறு படைப்பதற்கு அதைப் பயன் படுத்த வேண்டும்!" என்ற கருத்தை முதன்முதலில் (1837-இல்) வெளியிட்ட பெருமை 'ஜேம்ஸ் பிரின்ஸெப்' என்ற ஆங்கிலேயருக்கே உரியது. 'ஆசியாவின் ஆராய்ச்சிகள்' போன்ற இதழ்களில் கல்வெட்டைப்பற்றிய கட்டுரைகள் வெளிவந்தன. 'தொல் பொருள் ஆய்வுத்துறை ஒன்று அரசினரால் தொடங்கப்பட்டது. அலெகசாண்டர் கன்னிங்காம் என்பவர் இதன் 'பொது இயக்குநராகப் பணிபுரிந்தார். கல்வெட்டுக்களைப் புத்தகவடிவில் கொண்டுவர விரும்பினர். அதன் பயனுய் 1871-இல், அசோகர் கல்வெட்டுக்கள்' வெளியாயின. ஃபிளீட், பர்ஜஸ் போன்ற அறிஞர்களும் இத்துறையில் ஊக்கம் காட்டினர். சென்னை மாநிலக் கல்வெட்டு ஆய்வுத் துறை, இவ்வகையில் நன்கு

பணிபுரிந்தது. கல்வெட்டுக்களைப் 'படி' எடுத்து, அவற்றைத் தொகுத்து, 1887-இல் ஆண்டறிக்கையாக வெளியிட்டது. பின்பு 1890-இல், சென்னைமாநிலக்கல்வெட்டு ஆராய்ச்சியாளரான 'ஹூல்ஷ்' என்பவர், 'தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்' முதல் தொகுதியை வெளியிட்டார்.[34] இந்நூல், தமிழர்தம் என்ற பெருமையை உலகறியச் செய்தது எனில் மிகையன்று!

கல்வெட்டிற் காணப்படும் எழுத்துக்களைக் குறித்து ஆராய்ந்த மேலைநாட்டு அறிஞர் பலராவர். அவர்களில், **டாக்டர் கீல்ஹார்ன்** என்பவர் குறிப்பிடத் தக்கவர். அவர், தமிழ்க் கல்வெட்டுக்களில் காணப்படும் மாதம், நாள், நாழிகை ஆகியனபற்றி அறிவதற்காகத் 'தமிழ்க் கணக்கு முறை' யினைப் பயின்றார்; பின்பு அக்காலங்களைக் கணக்கிட்டு அறிவித்தார்! தமிழகத்தில் இத்துறையில் அரும்பாடு பட்டவர்களில், கே. வி. சுப்பிரமணிய ஐயர், டி. ஏ. கோபிநாதராவ், தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், எச். கே. கிருஷ்ண சாஸ்திரி, ஐ. மகாதேவன், டி. வி. மகாலிங்கம், டாக்டர் மா. இராசமாணிக்கனார், அவ்வை சு. துரைசாமிப்பிள்ளை, வை. சுந்தரேச வாண்டையார், வெங்கோபராவ், சா. கணேசன், புலவர் இராசு, டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், மயிலை. சீனி, வேங்கடசாமி, டாக்டர் இரா. நாகசாமி போன்றோரை ஈண்டுக் குறிப்பிடலாம்!* தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறையில் பணிபுரிந்துவரும் அனைத்துப் பேரறிஞர்களுமே இத்துறையில் பேரூக்கம் காட்டிவருவது என்றும் போற்றத் தக்கது!



* இவர்களைப் போன்ற இன்னும்பல அறிஞர்கள் உள்ளனர். சுருக்கமாகவே ஈண்டுச் சொல்லப்பட்டன.

# 3

## கல்வெட்டுக்களில் காவலர்கள்

நம் தமிழகத்தைப் பொறுத்தமட்டில் 'நாட்டு வரலாறு' முறையாக எழுதப்படவில்லை. 'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்த குடி'[35] என்று பெருமையாகப் பேசலாம்; ஆனால் இப் பெருமைக்கான வரலாற்றுச் சான்றுகளை நம்மவர்கள் எழுதி வைக்காமற் போயினர்! சங்க இலக்கியங்களான எட்டுத் தொகையும், பத்துப் பாட்டும் பண்டைத் தமிழர்தம் வரலாற்றைப் பாரறியப் பறைசாற்றுவன என்றாலும் வரலாற்றுப் பேராசிரியர்கள் இவற்றை ஏற்றுக் கொள்வதில்லை! இந் நாட்டிற்கு வந்துபோன வெளிநாட்டார் எழுதி வைத்த குறிப்புக்களும், ஆங்காங்கு அகழாய்வில் கண்டு பிடிக்கப்பட்ட நாணயங்கள், மட்பாண்டங்கள், முதுமக்கள் தாழிகள், செப்பேடுகள் ஆகியனவும், தமிழர் வரலாற்றை அறிய உறுதுணைபுரிந்தன. இவற்றைப் போலவே கல்வெட்டுக்களும், தமிழக வரலாற்றைக் குறிப்பாகத் தமிழ் மன்னர்களின் வரலாற்றை அறியப் பேருதவி புரிகின்றன.

ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே, நம் தமிழகத்தை முடியுடை மூவேந்தர்கள் முறையோடு ஆட்சிபுரிந்தனர் என்பதை,

''வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்''[36]

என்ற தொல்காப்பியர் கூற்றால் உணரலாம் ஆனால் அவர்கட்குப் பின்னர் ஆட்சிபுரிந்த பல்லவர்களைப் பற்றிய குறிப்பு, இலக்கிய வாயிலாகத் தெற்றெனத் தெரியவில்லை. இக் குறையைப் போக்குவன கல்வெட்டுக்களும் செப்பேடுகளும்! இவ்வாறே, சங்ககாலப் பாண்டியர்களுக்குப் பின் தமிழகம் 'களப்பிரர்' என்ற ஓர் இனத்தவரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. 'கடுங்கோன்' என்ற பாண்டிய மன்னன் அக் களப்பிரர்களை வென்று மீண்டும் பாண்டியராட்சியை நிலை நிறுத்தினான் என்பதை 'வேள்விக்குடிச் செப்பேடுகள்' விளம்புகின்றன. இவ்வகையில் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் வரலாற்றுக் கருவூலங்களாக மிளிர்கின்றன!

கல்வெட்டுக்கள் கூறும் 'காவலர்கள்' (அரசர்கள்) பலப்பலர்; அவர்களில் ஒருசிலரைப்பற்றி மட்டும் ஈண்டுக் காண்போம்.

மெய்க் கீர்த்தி :

'கல்வெட்டுத் தோன்றிய காலத்'தைக் கூறும்போது அரசனின் 'மெய்க்கீர்த்தி'யும் இடம்பெறுவதுண்டு என்று குறிப்பிட்டோம் அல்லவா? இத்தகு மெய்க்கீர்த்திக்குரிய இலக்கணம் யாது? 'பன்னிரு பாட்டியல்' என்னும் இலக்கண நூல் பின்வருமாறு இயம்புகின்றது:

"சீர்நான் காகி இரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்
அந்தத் தவன்வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்
இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட வுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி"[36]

நான்கு சீர்களை உடைத்தாய், இரண்டடித் தொடைநயம் கொண்டதாய், அரசனின் மெய்ப்புகழும் வரலாறும் உரைத்துப் பின்பு, 'அவனுடைய பட்டத்தரசியுடன் நீடு வாழ்க' எனப்

போற்றி, இறுதியில் அவனது இயற்பெயர் இயம்பி, 'ஊழிக் காலம் வரையும் சிறந்து வாழ்க' என வாழ்த்தும் வகையில் அமைவது மெய்க்கீர்த்தி என்பதை இந்நூற்பாவால் அறியலாம்.

மெய்க்கீர்த்தியின் தொடக்கத்தைக் கொண்டே 'இஃது இன்ன அரசர்க்கு உரியது' என்று எளிதிலே கண்டு கொள்ளலாம். பின்வரும் பட்டியல் ஒருசிறு சான்று :

| மெய்க்கீர்த்தித் தொடக்கம் | அரசன் |
|---|---|
| 1. "திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்" | ... முதலாம் இராசராசன் |
| 2. "திருமன்னி வளர இருநில மடந்தையும்" | ... முதலாம் இராசேந்திரன் |
| 3. "திங்களேர்தரு தன்தொங்கல் வெண்குடைக்கீழ்" | ... முதலாம் இராசாதிராசன் |
| 4. "திருமாது புவியெனும் பெருமாதர்" | ... இரண்டாம் இராசேந்திரன் |
| 5. "திருவளரத் திரள்புயத் திருநிலவலயம்" | ... முதலாம் வீரராசேந்திரன் |
| 6. "புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்" | ... முதலாம் குலோத்துங்கன் |
| 7. "பூமாலை மிடைந்து பொன்மாலை நிகழ்தர" | ... விக்கிரமசோழன் |
| 8. "புயல் பெருக வளம் பெருக" | ... மூன்றும் குலோத்துங்கன் |
| 9. "பூமருவிய திருமடந்தை" | ... மூன்றும் இராசேந்திரன் |
| 10. "பூவின் கிழத்தி மேவிவீற் றிருப்ப" | ... முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் |

11. ''பூமருவிய திருமடந்தையும் செயமடந்தையும்''
புயத்திருப்ப'' ... முதலாம் மாறவர்மன்
சுந்தர பாண்டியன்

12. ''பூமிசை வனிதை மார்பினில் பொலிய''
... அரிகேசரி பராக்கிரம
பாண்டியன்

சில கல்வெட்டுக்களில் இத்தகைய மெய்க்கீர்த்தி சொல்லப்பட்டிருக்காது. இன்னுஞ் சிலவற்றில் 'புயல் வாய்த்து' என்பது போல மெய்க்கீர்த்தியின் தொடக்கத்தை மட்டும் தந்து, அதனை முழுதும் எழுதாமல் விட்டுவிடுவார்கள். இன்னும் சிலவற்றில் அரசனது இயற்பெயர் குறியாமல் 'திரிபுவனச் சக்கரவர்த்தி' என்றோ, 'கோனேரின்மை கொண்டான்' 'என்றோ பொதுப் பெயர்களைக் குறித்திருப்பர். சோழப் பேரரசர்கள், மெய்க்கீர்த்தியில் தங்களுடைய புகழ், வெற்றி மட்டுமே குறித்துக் கொள்வர். ஆனால், பாண்டிய வேந்தர்களோ, தங்கள் புகழோடு தங்கள் முன்னோர்களின் புகழ், வெற்றிகளையும் சேர்த்துக் கூறிக் கொள்வர்!

முதலாம் இராசராச சோழன் (கி. பி. 985 - 1014) :

சோழப் பெருநாட்டின் வளர்ச்சிக்கு முதற்காரணமாக இருந்தது, சோழர்குடியில் தோன்றிய அரசர்களின் பேராற்றலேயாகும். ''அத்தகைய ஆற்றமைந்த சோழ மன்னர்களுள் முதல் இராசராசசோழன் தலைமைவாய்ந்தவன் என்று கூறலாம்'' என்பர்வரலாற்றுப்பேரறிஞர் தி. வை. சதாசிவப்பண்டாரத்தார்.[37] இவன் 'சுந்தரசோழன்' என வழங்கும் இரண்டாம் பராந்தகனுக்கும் அவன் மனைவி வானவன்மா தேவிக்கும் பிறந்தவன். இவனது இயற் பெயர் அருண்மொழித் தேவன் என்பது. இராசராசன், இரவிகுல மாணிக்கம், இராசேந்திர சிங்கன், கேரளாந்தகன், நித்த விநோதன், நிகரிலி சோழன், பாண்டிகுலாசனி முதலான சிறப்புப் பெயர்கள் இவனுக்குண்டு. இளமையில், இவனுடைய சிறிய தந்தை உத்தமசோழனின் மனைவி செம்பி-

யன்மா தேவியாலும், இவனுடைய தமக்கை குந்தவையாராலும் வளர்க்கப்பட்டான். இளமையிலேயே சிறந்த சிவப்பற்று உடையவனாக விளங்கினான். எனவே இவன் தன் ஆட்சிக்காலத்தில் கோயில் கட்டுவதிலும், கலைவளர்ப்பதிலும் பெரும்புகழ் பெற்றான். தஞ்சைமாநகரில் 'இராசராசேச்சரம்' என்னும் பெருங் கோயிலைக்கட்டி, அதன் நாள் வழிபாட்டிற்கும், திருவிழாக்களுக்குமாக பல்வகை மானியங்களை அளித்துப் பெரும்புகழ் கொண்டான்!

இவன், சோழப் பெருநாட்டை மண்டலம், வளநாடு, நாடு, கூற்றம், சதுர்வேதி மங்கலம் எனப் பல பிரிவுகளாகப் பிரித்தான். அவற்றுட் சில, இவன் பெயர்களால் வழங்கப்பெற்றன. சயங்கொண்ட சோழ மண்டலம் (தொண்டைநாடு), மும்முடிச்சோழமண்டலம் (ஈழநாடு), இராசராச மண்டலம் (பாண்டிநாடு), நிகரிலி சோழ மண்டலம் (நுளம்பபாடி) என்பன அவை!

தன் நாட்டின் நிலங்களை அளந்தான்; விளைவு நிலங்கட்கு வரிவிதித்தான். நாட்டில், ஊராட்சி செவ்வனே நடைபெறச் செய்தான். வலிமை வாய்ந்த போர்ப்படையும், கப்பற்படையும் வைத்திருந்தான்.

இவனுக்கு உலோகமா தேவியார், வானவன்மா தேவியார் முதலான பல மனைவியர் இருந்தனர். இராசேந்திரன் என்ற மகனும், மாதேவடிகள், குந்தவை, கங்கமாதேவி என்ற பெண்மக்களும் இவனுக்கிருந்தனர்.

தன் ஆட்சியில் நிகழ்ந்த வரலாற்று உண்மைகளை நன்கு விளக்கும் மெய்க்கீர்த்தியை இனிய தமிழ்மொழியில் ஆசிரியப்பாவில் அமைத்துத் தன் கல்வெட்டுக்களின் தொடக்கத்தில் பொறிக்கும் வழக்கத்தை முதன்முதலில் மேற்கொண்டவனும் இவனே! இவனுக்குப் பின்வந்த காவலரெல்லாம் அச்செயலைப் போற்றித் தாமும் மேற்கொள்வாராயினர். எனவே, "அரசர்கள் தம் மெய்க்கீர்த்திகளைக் கல்வெட்டுக்களில் எழுதும் வழக்கம் முதலில் இராசராச சோழன் காலத்தில்தான் உண்-

டாயிற்று என்பதும் அதற்கு முன்னர் அஃது இல்லை என்பதும் அறியற்பாலனவாகும்!'' என்பர் அறிஞர்,[38]

இவனது மெய்க்கீர்த்தி வருமாறு:

''திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்
கடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்
எண்டிசை புகழ்தர ஈழமண் டலமும்
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்
முன்னீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமும்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
எழில்வள ரூழியு ளெல்லா யாண்டும்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வர்மரான
ஸ்ரீராச ராச தேவர்க்கு''[39]

இம் மெய்க்கீர்த்தியால் இராசராசன் அடைந்த மாபெரும் வெற்றிகளை நம்மால் அறியமுடிகின்றது. தமிழகத்தின் தென் பகுதியில் உள்ள 'காந்தளூர்ச் சாலையில் கலமறுத்தது' முதல், வடக்கே பம்பாய் மாநிலத்தின் தென்பகுதியாகிய 'இரட்டபாடி ஏழரை இலக்கம்' வரை வெற்றிகொண்ட பேரரசன் என்பதை இம் மெய்க்கீர்த்தி விளக்கி நிற்கின்றதன்றோ?

இராசராசன் ஆட்சிக் காலத்தில் அமைச்சராகவும், படைத் தலைவராகவும், நாட்டதிகாரியாகவும், திருமந்திர ஓலை நாயகமாகவும், அறநிலையக் கண்காணிப்பாளராகவும் இருந்து அரசாங்கத்தை நன்கு நடத்திவந்த அரசியல் அதிகாரிகள் பலராவர். அவர்களைப்பற்றியும் கல்வெட்டுக்கள் விரித்துரைக்கின்றன. சேனாபதி கிருட்டிணண் இராமனான மும்முடி சோழ பிரம மாராயன், பரமன் மழபாடியானான மும்முடிசோழன், சேனாபதி குரவன் உலகளந்தானான இராச-

ராய மாராயன், மதுராந்தகன் கண்டராதித்தன், ஈராயிரவன் பல்லவரையன் ஆகிய மும்முடி சோழ போசன், பொய்கை-நாடு கிழவன் ஆதித்த சூரியனாகிய தென்னவன் மூவேந்த-வேளான் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இத்தகு மாமன்னனாகிய இராசராசனது வரலாற்றைக் கூறும் நூல் ஒன்று அந்நாளில் இருந்தது எனத் 'திருப்பூந் துருத்திக் கல்வெட்'டால் அறிய முடிகின்றது. அந் நூலின் பெயர் 'ஸ்ரீ இராசராச விஜயம்' என்பது.[40] அன்றியும் 'இராசராசேசுவர நாடகம்' என்ற நாடக நூல் ஒன்றும் இருந்தது என்பது தஞ்சைப் பெரியகோயிலில் உள்ள கல்வெட்டொன்றால் தெரிய வருகின்றது.[41]

முதலாம் இராசேந்திர சோழன் (கி. பி. 1012 — 1044):

இவன், முதலாம் இராசராசனுக்கும் வானவன்மா தே-விக்கும் பிறந்தவன். 'மதுராந்தகன்' என்பது இவனது இயற்-பெயர். இவனும் தம் தந்தையைப் போலவே மாபெரும் வெற்றிகளைக் குவித்தவன்! 'இடைதுறைநாடு' முதல் 'வங்காள தேசம்' வரை மாப்பொரு தண்டாற் கொண்ட மாவீரன் என்ப-தைத் 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்ற இவனது மெய்க்கீர்த்தி விளக்குகிறது. 50 வரிகளைக் கொண்ட இவனது மெய்க்கீர்த்தியின் ஒருசில பகுதிகளை மட்டும் இவண் சுட்டலாம்:

"ஸ்பஸ்திஸ்ரீ
திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவிய ராகி இன்புற
நெடிதியல் ஊழியுள் இடைதுறை நாடுந்
துடர்வன வேலிப் படர்வன வாசியுஞ்
சுள்ளிச் சூழ்மதிட் கொள்ளிப் பாக்கையு
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகடல் ஈழத் தரசர்த முடியும் ...
தங்காத சாரல் வங்காள தேசமும் ... மாப்
பொருதண்டாற் கொண்டாற் கொண்ட கோப்பர

கேசரி பன்ம ரான உடையார்ஸ்ரீ
ராஜேந்ர சோழதே வற்கு;'[12]

இராசேந்திர சோழன் உருவாக்கிய பெரிய நகரம் 'கங்கை கொண்ட சோழபுரம்' என்பது. இந்நகரில் இவன் அமைத்த 'முடிகொண்ட சோழன் திருமாளிகை' யில் 'தேவாரச் சுற்றுக் கல்லூரி' ஒன்றிருந்தது. அதில் அமர்ந்து கொண்டு அவ்வப்போது அறக் கட்டளைகள் இடுவதுண்டு!

தஞ்சைப் பெரிய கோயிலில் பூசை செய்து வந்த 'சர்வ-சிவ பண்டிதர்' என்பார் இராசேந்திர சோழனின் சமயா-சாரியராய்த் திகழ்ந்தவர். இவ்வாசிரியர்க்குச் சீடர்கள் பலர் இருந்தனர். அவர்கள் ஆரிய தேசம், மத்திய தேசம், கௌட தேசம் முதலான வடபுலங்களுக்குச் சென்று, சமயப் பணி புரிந்தனர்.

இராசேந்திரன் தம் ஆசிரியப் பெருமகனார் சர்வசிவ பண்டிதர்க்கும், மேற்கூறிய வடபுலங்களுக்குச் சென்று பணி புரியும் அவருடைய சீடர்களுக்கும், அச் சீடர்களின் சீடர் களுக்கும் (ஒழுக்க முடையவர்க்குமட்டும்) ஆசாரிய போக-மாய் ஆண்டு தோறும், அரண்மனையில் உள்ள 'ஆட-வல்லான்' என்னும் மரக்காலால் உள்ளூர்ப் பண்டாரத்-திலிருந்து, ௨000 கலநெல், நிறைந்த அளவில், அளந்து கொடுக்குமாறு, தன் மாளிகையில் இருந்தபடியே ஆணை-பிறப்பித்தான். இப் போகத்தைச் சந்திர சூரியர் உள்ளளவும் நுகர்தற்குரியர் என்றும் திருவாய் மொழிந்தருளினன்!

"உடையார் ஸ்ரீ ராசேந்திர சோழதேவர். கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலினுள்ளால், முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்துத் தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தானஞ் செய்தருளா இருந்து. உடையார் ஸ்ரீ ராஜராஜ ஈஸ்வரமுடையார் கோயிலில் ஆசார்ய போகம் உடையார் ஸர்வசிவ பண்டித சைவாசார்யர்க்கும் இவ்வுடையார் சிஷ்யரும் பிற சிஷ்யரும் ஆய் ஆர்ய

தேசத்தும் மத்திய தேசத்துத்தான், கௌடதேசத்துத்தான் உள்ளாராய், யோக்யராயிருப்பார்க்கே ஆட்டாண்டு தோறும் இத்தேவர் கோயிலில் ஆடவல்லா னென்னும் மரக்காலால் உள்ளூர்ப் பண்டாரத்தே நிறைச்சள வாக இரண்டாயிரக்கல நெல்லு ஆட்டாண்டுதோறும் சந்திரா தித்தவல் பெறத் திருவாய் மொழிந்தருள ..."[43]

என்னும் கல்வெட்டுப் பகுதி இவ்வறச் செயலைக் கூறுவதாம்.

முதலாம் இராசாதிராசன் : (கி. பி. 1018 - 1054)

இவன், முதலாம் இராசேந்திர சோழனின் முதல் மகன். இவனுக்கு ஆகவமல்ல குலகாலன், கலியாணபுரங்கொண்ட சோழன், செயங்கொண்ட சோழன், விசயராசேந்திரன், வீர ராசேந்திர வர்மன் முதலான பல பெயர்கள் உண்டு 'இராச கேசரி' என்ற பட்டம் புனைந்து கொண்டவன் இவன் மனைவி-யின் பெயர் 'திரைலோக்கியமுடையார்' என்பது. கொடிய வறுமையை நாட்டினின்று ஓட்டினான். தன் சிறிய தந்தை, திருத்தமையன், தம்பியர், தன் தவப்புதல்வர்கள் முதலானோர்க்-குச் சேரநாடு, சளுக்கிய நாடு, பாண்டிய நாடு, கங்கபாடி, ஈழம், பல்லவநாடு, கன்னியாகுப்சம் முதலான நாடுகளைத் தந்து பொன்னணி மகுடஞ் சூட்டி ஆளச் செய்தான். இவனின் வெற்றிச் செயல்களையெல்லாம் இவனது 'திங்களேர் தருதன் றொங்கல் வெண்குடை' என்ற மெய்க்கீர்த்தி மிக விளக்கமாக விளம்புகிறது, அதன் ஒரு பகுதி வருமாறு :

"..................தென்னவர் மூவருள்
மானா பரணன் பொன்முடி யானைப்
பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வாரள வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தனது வாரணக்
கதக்க ளிற்றினா லுதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையும் கற்றைவெண் கவரியும்

சிங்காதனமும் வெண்களத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை முல்லையூர் துரத்தி யொல்கலில்
வேணாட் டரசைச் சேரனாட் டொதுக்கி
.. ... .... ......... ......... ..... ...
எனைப்பல வரைசரை முனைவயிற் றுரத்தி
வய்பலர் தருபொழிற் கம்பிலி நகருட்
சளுக்கியர் மாளிகை தகர்ப்பித் திரக்கமில்
வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர்
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துர ரையணர் சிங்களர் பங்களர்
ஆந்திரர் முதலிய வரைசரிடு திறைகளும்........''[44]

இவையும் இவை போன்ற பிற பகுதிகளும் முதலாம் இரா-சாதிராசனின் மிகச் சிறந்த வெற்றிகளைக் குறிக்கின்றன.

## இரண்டாம் இராசேந்திர சோழன் : (கி. பி. 1051 - 1063)

இவன் 'கங்கை கொண்ட சோழன்' எனப்படும் முதலாம் இராசேந்திரனின் இரண்டாவது மகன்; முதலாம் இராசாதிராச-னின் தம்பி. இவன், தன் தமையன் நடாத்திய போர்களில் உடனிருந்து உதவியவன். இளவரசனாக இருந்த இவன், தன் தமையன் முதலாம் இராசாதிராசன் கொப்பத்துப்போரில் இறந்த பின், சோழநாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். இவனுக்கு 'விசயராசேந்திரன்' என்ற வேறு பெயரும், 'பரகேசரி' என்ற பட்டமும் உண்டு. இவனுக்குக் 'கிழானடிகள்' என்ற மனைவி-யும், ஆண்மக்கள் அறுவரும், 'மதுராந்தகி' என்ற மகளும் இருந்தனர் என்றும், இம்மதுராந்தகியே முதற்குலோத்துங்-கனுக்கு மணமுடிக்கப்பெற்றவள் என்றும் கூறுவர்.

இவன், போர் வேட்கையுற்று இரட்டமண்டலத்தின் மீது படையெடுத்தான். அதனை ஆண்டுவந்த மேலைச் சாளுக்கிய மன்னனான ஆகவமல்லன், தன் படைத்தலைவர்கள் பல-ருடன் 'கொப்பம்' என்னுமிடத்தில் இவ் இராசேந்திரனை

எதிர்த்துப் போர் செய்து, தோற்றுத் தலைவிரிகோலமாய் முதுகிட்டு ஓடினான். இச் செய்திகளையெல்லாம், இரண்டாம் இராசேந்திர சோழனின் "திருமாது புவியெனும் பெருமாதர்" என்னும் மெய்க்கீர்த்தி செப்புகிறது.

> " ... இகல்வேட் டெழுந்துசென்
> றெண்டிற லிரட்ட மண்டல மெய்தி
> நதிகளும் நாடும் பதிகளு மனேகம்
> அழித்தனன் வளவனெனு மொழிப்பொருள் கேட்டு
> வேகவெஞ் சளுக்கி யாகவ மல்லன்
> பரிபவ மெனக்கிதன் றெரிவிழித் தெழுந்து
> செப்பருந் திறத்த கொப்பத் தகவையிற் ... சளுக்கி
> குலகுல குலைந்து தலைமயிர் விரித்து
> வெந்நுற் றுளித்துப் பின்னுற நோக்கிக்
> கால்பரிந் தோடி மேல்கடற் பாயத்
> துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
> சத்துருபயங் கரன்கர பத்திரன் மூல
> பத்திர சாதி பகட்டரை சநேகமும்
> எட்டுநிரை பரிகளு மொட்டக நிரைகளும்
> வராகவெல் கொடிமுத லிராரபரிச் சின்னமும்
> ஒப்பில்சத்தி யவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
> தேவியர் குழாமும் பாவைய ரீட்டமு
> மினையன பிறவு முனைவயிற் கொண்டு
> விசையாபி டேகம் செய்து ... "[45]

என்பது இவனது மெய்க்கீர்த்தியின் ஒருபகுதியாகும்.

### முதலாம் வீரராசேந்திரன் (கி. பி. 1063 - 1070) :

இவன் 'கங்கைகொண்ட சோழன்' எனப்படும் முதலாம் 'இராசேந்திர சோழனின் நான்காம் மகன். இவனுக்கு இராசகேசரி' என்ற பட்டப் பெயரும், இராசாசிரயன், இராசராசேந்திரன், கரிகாலன், சகல புவனசிரயன், பாண்டியகுலாந்தகன், வீரசோழன் முதலான சிறப்புப் பெயர்களும், 'இராச-

கேசரி' என்ற பட்டப் பெயரும் உண்டு. இவன், தமிழ் மொழியிலும், சைவசமயத்திலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவன். பாண்டி மண்டலத்தில், மிழலைக் கூற்றத்தில் உள்ள 'பொன்பற்றி' என்னும் நகரையாண்ட புத்தமித்திரன் என்பார், இச் சோழவேந்தனின் வேண்டுகோட்கிணங்க 'வீரசோழியம்' என்னும் தமிழ் இலக்கண நூலை யாத்துள்ளார் என்பதிலிருந்து இவனின் தமிழ்ப்பற்றையும்; இவன் தில்லைச் சிற்றம்பலத்து நடராசருக்கு 'முடியணி' ஒன்று அளித்துள்ளான் என்பதிலிருந்து இவனின் சைவசமயப்பற்றையும் அறிந்து கொள்ளலாம். இவன் பட்டத்தரசியின் பெயர் உலக முழுதுடையாள். இவனுக்கு மதுராந்தகன், கங்கை கொண்ட சோழன் என இரு ஆண்மக்களும், ஒரு பெண் மகவும் உண்டு என்பர்.

இவனைப்பற்றிய கல்வெட்டுக்களில், "திருவளரத் திரள் புயத் திருநில வளையம்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியும், "வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியுமாக இருவகை மெய்க்கீர்த்திகள் காணப்படுகின்றன. இவற்றால் இவனின் வெற்றிச் செயல்களை அறியலாம்.

"...................................

வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தென்னனைத் தலைகொண்டு சேரனைத் திறைகொண்டு
சிங்கள தேசம் அடிப்படுத்து வெங்களத்
தாகவ மல்லனை ஐம்மடி வெந்கண்டு
வேங்கை நாடு மீட்டுக் கொண்டு
தன்னுடன் பிறந்த முன்னவர் விரதமுடித்து
வந்து பணிந்த விஜயாதித்தர்க்கு மண்டலமருளிக்
கழலடைந்த மன்னர்க்குக் கடாரமெறிந்து கொடுத்
தருளிச்
சோமேசுவரனைக் கன்னட தேசங் கைவிடத் துரத்தித்
தன்னடி யடைந்த சளுக்கி விக்கிரமாதித்தனை

எண்டிசை நிகழக் கண்டிகை கட்டி
இரட்டபாடி ஏழரை இலக்கமும் எறிந்துகொடுத்தருளி
விஜய சிம்மாசனத்து உலகமுழுதுடை யாளோடும்
வீற்றிருந் தருளின சக்கர வர்த்திகள்
ஸ்ரீ வீரராஜேந்திர தேவர்''[146]

''பாண்டியனையும், சேரனையும் வென்று, ஈழத்தை அடிப்படுத்தி, ஆகவமல்லனை ஐந்துமுறை புறமுதுகிட்டோடச் செய்து தன் தமையன்மார் கொண்ட விரதத்தை நிறைவேற்றி, இடண்டாம் சோமேசுவரனை வென்று, ஆறும் விக்கிரமாதித்தனுக்குக் கண்டிகை கட்டித்தொங்கவிட்டு, இரட்டபாடி ஏழரை இலக்கத்தை வென்றான் வீரராசேந்திரன்'' என்ற வரலாறுமட்டுமன்றி, இன்னும் பலவெற்றிச்சிறப்புக்களையும் இவனது கல்வெட்டு விரிவாகச் சொல்லுகின்றது!

## முதலாம் குலோத்துங்க சோழன் (கி. பி. 1070-1120):

இவனது இயற்பெயர் இராசேந்திரன் என்பது. இவன், கீழைச் சாளுக்கிய வேந்தனான இராசராச நரேந்திரனுக்கும், அம்மங்கைதேவிக்கும் பிறந்தவன். அம்மங்கைதேவி என்பாள், முதலாம் இராசேந்திர சோழனின் மகளாவாள்.

இராசேந்திரன், 'விட்ணுவர்த்தனன்' என்னும் பெயர் தாங்கி வேங்கி நாட்டு இளவரசனானான். பின்னர் தாய்வழி உரிமை பாராட்டிச் சோழப் பேரரசினை ஏற்று, 'முதற்குலோத்துங்கன்' என்னும் பெயர்தாங்கி முடிசூட்டிக் கொண்டான். இவனுக்கு அகளங்கன், அபயன், குலசேகர பாண்டிய குலாந்தகன், சர்வ லோகாசரியன், சுங்கம் தவிர்த்த சோழன், திருநீற்றுச் சோழன், விருதராச பயங்கரன் முதலான சிறப்புப் பெயரும், 'இராசகேசரி' என்ற பட்டப்பெயரும் உண்டு இவனின் பட்டத்தரசி மதுராந்தகி என்பவளாவள். இவளைத் தவிரத் தியாகவல்லி, ஏழிசை வல்லபி, திரைலோக்கியமாதேவி என்னும் மனைவியரும் இருந்தனர். இவனுக்கு இராசராச சோழகங்கன், இராசராச மும்முடிச் சோழன், வீரசோழன், விக்கிரம சோழன்

முதலான ஆண்மக்கள் பலர் இருந்தனர். இவர்களுள் விக்கிரம சோழனே, முதற் குலோத்துங்கனுக்குப் பின் பட்டம் எய்தி ஆண்டவன். இவனது மெய்க்கீர்த்தி 'புகழ் சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்' என்று தொடங்குகின்றது.

"முதற்குலோத்துங்கன், சக்கரக்கோட்டம் முதலான வட-புலநாடுகள் பலவற்றை வென்முன்; பாண்டியனின் தலையைத் துணித்தான்; விக்கிரமாதித்தனையும் அவன் தம்பி சயசிங்கனை-யும் புறமுதுகிடச் செய்தான்; குமரிக்கடலைச் சோழநாட்டின் தென்னெல்லையாக்கினன்" முதலாய பல வெற்றிச் செய்திகள் இவனது கல்வெட்டால் புலனாகின்றன.

"...தென்னவன் கருந்தலை பருந்தலைத்திடத்தன்
பொன்னகர் புறத்திடைக் கிடப்ப இந்நாள்
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யென்றுஞ்
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்கை
வில்லெதிர் கோடா விக்கலன், கல்லதர்
நங்கிலி துடங்கி மணலூர் நாடுவென்ற
துங்க பத்திரை யளவும் வெங்கணும்
பட்ட வெங்களிறும் விட்டதன் மானமும்
கூறின வீரமுங் கிடப்ப ஏறின
மலைகளு முதுகு நெளிப்ப ... கொற்ற
விஜய ஸ்தம்பமெத் திசைதொறும் நிறுத்தி
முத்தின் சலாபமும் முத்தமிழ்ப் பொதியிலும்
மத்தவெங் கரிபடு மையச் சய்யமுங்
கன்னியுங் கைக்கொண் டருளி தென்னாட்
டலைகாட்டி.........
வீரமும் தியாகமும் விளங்கவீற் றிருந்
தருளின கோவி ராஜகேசரி வந்ம
ராநசக்ர வர்த்திகள் ஸ்ரீகொலொத் துங்க
சோழ தேவர்க்கு......"[47]

என்ற மெய்க்கீர்த்தி, முதற்குலோத்துங்களின் அரிய வெற்றி-களை ஒருங்கே தொகுத்துத் தருகின்றது.

**விக்கிரம சோழன் (கி. பி. 1118 – 1136):**

இவன், முதற்குலோத்துங்க சோழனின் நான்காவது மகன். இவன் தாய் மதுராந்தகி. இராசராச சோழகங்கன், இராசராச மும்முடிச் சோழன், வீரசோழன் ஆகியோர் இவனுக்குத் தமையன்மாராவர். இவர்கள் அடுத்தடுத்து இறந்து போகவே, இவன் 1118-இல் இளவரசுப் பட்டம் பெற்றுப் பின் 1120 இல் ஆட்சிப் பொறுப்பேற்ருன். இவன், தன் இளங்கோப் பருவத்து வேங்கி நாட்டிலிருந்து ஆட்சி புரிந்தான். அப்போது, தென் கலிங்கத்தின் மீது படையெடுத்துச் சென்று, அந் நாட்டரசனுகிய தெலுங்க வீமனை வென்ருன். இவ் வெற்றிச் செய்தியைக் கவி மன்னர் ஒட்டக்கூத்தர் 'கலிங்கப் பரணி' என்ற நூலாற் சிறப்பித்தார். ஆனுல் அந்நூல் இப்போது கிடைக்கப் பெறவில்லை! இவனுக்குத் தியாக சமுத்திரம், அகளங்கன் என்ற சிறப்புப் பெயர்களும், 'பரகேசரி' என்ற பட்டமும் உண்டு. இவனுக்கு முக்கோக்கிழானடிகள், தியாக பதாகை, நேரியன்மாதேவி என்ற மூன்று மனைவியர் இருந்தனர். இரண்டாம் குலோத்துங்க சோழன் இவனுடைய மகனுவான்.

விக்கிரமசோழன் ஆட்சியில், வாணன்,[48] செஞ்சியர்கோன் காடவன்,[49] அனந்தபாலன்[50] முதலிய அரசியலதிகாரிகள் இருந்தனர்; தேவருடையான் மனதுக்கினியான் ஆகிய விராடராசன்,[51] திருச்சிற்றம்பலவன் மானசேகரன்,[52] சூரை நாயகன் மாதவராயன்[53] போன்ருேர் அவன் காலத்தில் தமிழகத்தில் வாழ்ந்த பிற அரசியலதிகாரிகளாவர்.

இவனது மெய்க்கீர்த்தி, "பூமாலை மிடைந்து பொன்மாலை நிகழ்தர" என்று தொடங்குகின்றது. "விக்கிரமசோழன், குளத் தெலுங்கவீமனை விரட்டினுன்; கலிங்க நாட்டை நெருப்பிட்டான்; செழியர், சேரலர், சிங்களர், கங்கர், கன்னடர், கொங்கர், கொங்கணர் ஆகியோர் இவனுக்குத் திறை செலுத்தினர். இவன், தன் தேவியரான முக்கோக் கிழானடி, தியாகபதாகை ஆகியவர்களோடு அரியணையில் வீற்றிருந்தான்!" என்ற செய்திகள் இம் மெய்க்கீர்த்தியில் சொல்லப்படுகின்றன.

"......................................
தெலிங்க வீமன் விலங்கல்மிசை யேறவும்
கலிங்க பூமியைக் கனையெரி பருகவும் ...
தண்ணளி பரப்பித் தனித்தனி பரந்து
மண்முழுதுங் களிப்ப மணிநா வொடுங்க
விசையமும் புகழும் மேல்மே லோங்கச்
செழியர்வெஞ் சுரம்புக சேரலர் கடல்புக
அழிதரு சிங்கள ரஞ்சிநெஞ் சலமரக்
கங்கர் திறையிடக் கன்னடர் வெந்நிடக்
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி உரிமையில் நிற்றஞ்சத்
தொல்லை யேழுலகுந் தொழுதெழத் தோற்றிய
முல்லை வாணகைய முக்கோக் கிழானடி
உமையொடுஞ் சங்கரன்
இமையந்திருந் தானெனப் பொருந்தினி திருப்ப
ஆங்கவன் மகிழ கங்கையொப் பாகிய
தெரிவையர் திலகம் தியாகப தாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடையா ளிவன்திருவுளத் தருள்
முழுதுடை யாளென அமைந்தினி திருப்பச்
செம்பொன் னின்வீர சிம்மா சனத்து
வீற்றிருந் தருளிய கோப்பரகேசரி பன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம
சோழதேவற்கு[21]

என்பது மெய்க்கீர்த்தியின் ஒரு பகுதியாகும்! இவன், தில்லைத் திருக்கோயிலுக்கு அரிய திருப்பணிகள் செய்துள்ளான் என்பதை இவனது மற்றொரு மெய்க்கீர்த்திக் கல்வெட்டால் அறியலாம்.

குலசேகர தேவபாண்டியன் (கி. பி. 1190-1216):

இவன், விக்கிரம பாண்டியனின் மகன் குலசேகர தேவனுக்கு 'முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன்', 'இராச

கம்பீரன்' எனும் பெயர்கள் உண்டு. இவனது அரியணைக்கு 'மழவராயன்', 'முனையதரையன்' என்ற பெயர்கள் உண்டு. இவனுடைய மெய்க்கீர்த்திகள் 'பூதலமடந்தை', 'பூவின் கிழத்தி', 'பூதல வனிதை' எனப் பலவாறாகத் தொடங்குகின்றன. ஆனால் இம் மெய்க்கீர்த்திகளில் இவனது புகழொன்றே பேசப்படுகிறதே யன்றி வரலாற்றுக் குறிப்புக்கள் பேசப்படவில்லை. எனினும் செம்பியர், வில்லவர், மாளவர், பல்லவர் ஆகியோர் இவனுக்குத் திறை செலுத்தி வந்ததாக மட்டும் அறிகிறோம். இவனுடைய கல்வெட்டுக்கள் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் காணப்படுவன கொண்டு இவன் பாண்டிய நாடு முழுதும் ஆண்டவன் எனலாம். இவனுடைய அரசியல் தலைவர்களில், களவழி நாடாள்வானாகிய சயங்கொண்ட சோழ சீவள்ளுவன் என்பான் குறிப்பிடத் தக்கவன்.

* "ஸ்வஸ்திஸ்ரீ
பூவின் கிழத்தி மெய்வீற் றிருப்ப......
அறநன்ற சமையங்கள் ஆறுத்தமைப்ப
காநில் வெங்கை விளலுடந் நுடன்து
நிந்நவர அங்களாகாசள தன்தை வீற்றிருப்ப
எங்சிகிசு எழுகடல் எழுபொழி
வென்கு நிழற்ற செங்கொல் நடப்ப
கொடுங்கலி நங்கி நெடும்பிலந் கொழிப்ப
பி......வர் செம்பியர் வில்லவ ஆடவர்
பல்லவர் திறை உறடன் முறைமுறை பமிய
இறுநெமிந் ஆளவம ஒருநெதி ஒங்க
இந்நமு தளாதிப இவ்விசை நாடம
மந்நி வள்ளர மணிஅனி விரஸிஹஸநது
விதறிரு தருழிய கொச்சடைய பற்மராந
த்ரிபுவந சக்கரவத்திகள் (திரிபுவந சக்கரவத்திகள்)
ஸிரி குலெசெகர தெவற்க்கு ......' [55]

எனும் மெய்க்கீர்த்தியால் மேற்கண்ட செய்திகள் உறுதிப்படும்.

---

* கல்வெட்டில் உள்ளபடியே ஈண்டு எழுதப்பட்டது. பிழை நீக்கிப் படிக்க வேண்டும்.

சுந்தரபாண்டியன் கி. பி. (1216 - 1238):

இவன் விக்கிரமபாண்டியனின் இரண்டாவது மகன்; சடையவர்மன் குலசேகர தேவ பாண்டியனின் தம்பி. ஆதலின், இவன், குலசேகரதேவ பாண்டியனுக்குப்பின், பாண்டிய நாட்டை ஆட்சிபுரிந்தான். இவனை 'முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்' என்பர் வரலாற்றாசிரியர். இவன் கி. பி. 1219இல் சோழநாட்டின்மீது படையெடுத்துச்சென்று, மூன்றும் இராசராசனை வென்றான்; தஞ்சை, உறையூர் ஆகிய நகரங்களை நெருப்பிட்டுக் கொளுத்தினான் சோழனின் பைம்பொன்முடியைப் பறித்துப் பாணனுக்குக் கொடுத்தான். 'ஆயிரத்தளி' என்ற அமராவதியில் உள்ள அபிடேக மண்டபத்தே வீராபிடேகம் செய்துகொண்டான். ஆதலின் இவன் 'சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியன்' என்று போற்றப்பட்டான் இவன், சிதம்பரம் சென்று தில்லைக் கூத்தன் திருவடி தொழுது திரும்பினான். பொன்னமராவதியில் உள்ள மணிமண்டபத்தில் மாண்புடன் வீற்றிருந்தபோது, தோற்றோடிய மூன்றும் இராசராசன் மீண்டுவந்து மன்றாடியதற்கேற்ப அவனுக்குச் சோணாட்டை வழங்கினான். ஆதலின் இவன் 'சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியன்' எனப்பட்டான். ஆனால் சில ஆண்டுகளில் மூன்றும் இராசராசன், சுந்தரபாண்டியனோடு மனம் மாறுபட்டான். எனவே இரண்டாம் முறையாகப் பாண்டியன், சோழநாட்டின்மீது படையெடுத்தான். மூன்றும் இராசராசன், தோல்வியுற்று வடநாடு சென்றுவிட்டான். சுந்தரபாண்டியன், சோழர்களின் தலைநகர்களில் ஒன்றான முடிகொண்ட சோழபுரத்தில் (பழையாறை) வீராபிடேகம் செய்துகொண்டான். ஆதலின், இவன் கல்வெட்டுக்களிற்சில, இவனைக் "கோமாற வர்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிடேகம் பண்ணியருளிய ஸ்ரீ சுந்தரபாண்டியதேவர்" எனப்புகழ்கின்றன இவன், புரட்டாசித்திங்கள் அவிட்ட விண்மீனிற் பிறந்தான் என்று திருப்புத்தூர்க் கோயிற் கல்வெட்டுக் கூறுகின்றது "உய்யநின்றாடுவானான குருகுல தரையன் என்பவன் இவனுடைய

அமைச்சன்; கண்டன் உதயஞ் செய்தான் காங்கேயன், திருக்காளப் பேருடையான் மழவர் சக்கரவர்த்தி முதலானோர் இவனுடைய அரசியல் அதிகாரிகள். காராணை விழுப்பரையர் இவனின் அவைக்களப் புலவர்'' என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இவனுடைய பட்டத்தரசி உலகமுழுதுடையாள் ஆவள். இவனைப்பற்றிய கல்வெட்டுக்கள் தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்களிற் காணப்படுகின்றன.

புதுக்கோட்டையைச் சார்ந்த திருமய்யம் வட்டம், கண்ணனூர், பாலசுப்பிரமணிய சுவாமி கோயிலில் உள்ள இவனைப்பற்றிய கல்வெட்டு வருமாறு :

''ஸ்வஸ்திஸ்ரீ
பூமருவிய திருமடந்தையுஞ் செயமடந்தையும்
புயத்திருப்ப
நாமருவிய கலைமடந்தையுஞ் செயமடந்தையும்
நலஞ்சிறப்பக்
கொளாந்த சினப்புலியுங் கொடுஞ்சிலையுங்
குலைந்தொளிப்ப
வாளார்ந்த பொற்கிரிமெல் வரிக்கயல்கள் விளையாட
இருங்கடல் வலையத் தறம் பெருகக்
கருங்கலி கடிந்து செங்கோல் நடப்ப
ஒருகுடை நிழலரு நிலங் குளிர
முவகைத் தமிழு முறைமையில் விளங்க
நால்வகை வெதமும் நவின்று டன்வர
ஐய்வகை வெழ்வியுஞ் செய்வினை யியற்ற
அறுவகைச் சமயமு மழகுடந் திகழ
எழுவகைப் பாடலு மியலுடன் பரவ
எண்டிசை யளவுஞ் சக்கரஞ் செல்லக்
கொங்கர் கலிங்கர் கொசலர் மாளுவர்
சிங்களர் தெலிங்கர் சினர் குச்சரர்
வில்லவர் மகதர் விக்கலர் செம்பியர்
பல்லவர் முதலிய பார்த்திவரெல்லா

முறைவிட மருளெந் ெருருவர் முந்ஒருவர்
முறைமுறை கடவதந் திறைகுணந் திறைஞ்ச ...
சொணுடு கொண்டருளிய
ஸ்ரீ சுந்தர பாண்டிய தெவற்கு....''[56]

இதில், சுந்தரபாண்டியன், தமிழும் சமயமும் தழைத் தினிதோங்கச் செய்தவன் என்பதையும், கொங்கர் முதலான பலரையும் வெற்றிகொண்டவன் என்பதையும் அறிகின்ருேம்.

இவ்வாருகக் கல்வெட்டுக்கள் பலவற்றை ஆராய்ந்தால் பல்வேறு அரசர்களைப்பற்றிய மெய்க்கீர்த்திகளை நாம் அறிந்து உண்மை வரலாறு உணரலாம்!



# 4

## கல்வெட்டுக்களில் ஊர்ச்சபைகள்

நாட்டாட்சி செவ்வனே நடைபெறுதற் பொருட்டு ஒரு நாட்டைப் பல்வேறு உட்பிரிவுகளாகப் பிரிப்பதுண்டு. இக்காலத்தே வட்டம், மாவட்டம், மாநிலம் என்றெல்லாம் பிரிக்கப்படுவன நாமறிவோம். இவற்றுள்ளும் ஊராட்சி, பேரூராட்சி, நகராட்சி, மாநகராட்சி, நகரியம் (Township) முதலான பிரிவுகளும் உண்டல்லவா? அக்காலத்தும் இத்தகைய பிரிவுகள் இருந்தன. ஊர்கள், கூற்றங்கள், நாடுகள், வளநாடுகள், மண்டலங்கள் என்று பிரிக்கப்பட்டிருந்தன என்பதை முதலாம் இராசராசன் கல்வெட்டால் உணரலாம். இவைதவிரத் தன்னாட்சியுடைய பெருநகரங்களும் இருந்தன. அவற்றிற்கு 'உக்கல்' அல்லது 'உசால்' என்று பெயர். இக்காலத்தே மாவட்டங்களுக்கு அரசியல் தலைவர்களின் பெயர்கள் இடுவது போல அக்காலத்தே நாடாளும் வேந்தன் பெயரால் நாடுகளும் ஊர்களும் அழைக்கப்பட்டன. இராசராசன் காலத்தில் சோழ மண்டலம் ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் ஒன்று அவனது சிறப்புப் பெயரால் 'இராசேந்திர சிங்க வளநாடு' எனப்பட்டது. அவ்வாறே அரிகேசரி பராக்கிரம பாண்டியன் பெயரால் 'பராக்கிரம பாண்டிய நல்லூர்ப் பற்று' என்று ஓர் ஊர்க்குப் பெயரிடப்பட்டது! ஊர்மக்கள் நலம் பேண ஊர்ச்சபைகள் இருந்தன. அக்காலத்தே ஊர்ச்சபைகள்

எப்படிச் செயலாற்றி வந்தன என்பதற்குக் கல்வெட்டுக்கள் பெருந்துணை புரிகின்றன. சிறப்பாகச் சோழப் பெருமன்னர்கள் காலத்தில் இத்தகு சபைகள் செய்து வந்த பணிகள் அளவிடற்கரியன. ஒரு சிலவற்றை மட்டும் இங்குக் குறிப்பிடலாம்.

**ஊர்ச்சபை அமைப்பு :**

ஊர்தோறும் ஊர்ச்சபைகள் இருந்தன. அச் சபைகளின் நேரடிக்கண் காணிப்பில் ஊர்கள் அமைந்திருந்தன; எனவே மக்களின் வாழ்க்கை மனவமைதியாகக் கழிந்தது. ஊர்க்கு ஏற்ற செயல்களைச் செய்வது, எவரேனும் தவறு செய்தால் தக்கவாறு தண்டிப்பது, நீதிக்கும் நேர்மைக்கும் பாடுபடுவது என்பன போன்ற குறிக்கோள்களை இச்சபைகள் கொண்டிருந்தன. இவைகள், அரசர்களுக்கும் அரசர்களால் அமர்த்தப்படும் அரசியல் அதிகாரிகளுக்கும் கட்டுப்பட்டு இயங்கி வந்தன.

இச்சபைகள், செயல்களைக் காலக் கழிவின்றி உடனுக்குடன் நிறைவேற்றுதற்பொருட்டு உட்கழகங்கள் சிலவற்றைக் கொண்டிருந்தன. அவற்றில் குறிப்பிடத்தக்கன சில: சம்வத்சர வாரியம், தோட்ட வாரியம், ஏரி வாரியம், பஞ்சவார வாரியம், பொன் வாரியம், கழனி வாரியம், கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், தடிவழி வாரியம், குடும்பு வாரியம் என்பனவாம்.

**தேர்தல் முறை :**

இப்போது, மறைமுக வாக்குச் சீட்டு மூலம் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கின்றோமல்லவா? இம் முறை அக்காலத்திலேயே இருந்து வந்திருக்கின்றது. இதற்குக் 'குடவோலைமுறை' என்று பெயர். இன்று கிராமம் அல்லது நகரப் பகுதிகளை 'வார்டுகளா'கப் (wards) பிரித்து, ஒவ்வொன்றுக்கும் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றோம். இத்தகு 'வார்டு'களுக்கு அன்று 'குடும்புகள்' என்று பெயர். ஒவ்வொரு குடும்பிற்கும் ஒவ்வோர் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவார். ஊர் அல்லது நகரத்தின் மக்கள் தொகைக்கு ஏற்பக் குடும்புகளின் எண்ணிக்-

கை அமைந்திருக்கும். செங்கற்பட்டு மாவட்டம் உத்தர மேரூர், 30 குடும்புகளைக் கொண்டிருந்தது; ஆனால் தஞ்சை மாவட்டம் செந்தலை 60 குடும்புகளைக் கொண்டிருந்தது!

உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதில் அவர்கள் மேற்கொண்ட செயன் முறைகள், இன்றும் எண்ணி எண்ணி இறும்பூது கொள்ளத்தக்கனவாயுள்ளன! முதலில், 'யார்யார் **உறுப்பினராதற்குத் தகுதியுடையர்**' என்பதை நோக்குவோம்: (1) தம் சொந்தவீட்டில் குடியிருப்போர். (2) காணிக்கடன் செலுத்தற்குரிய கால்வேலி நிலமாயினும் வைத்திருப்போர் (3) சிறந்த கல்விகற்று, அறநெறியினின்று பிறழாதோர் (4) நல்லவழியில் பொருள்தேடி வாழ்ந்துவருவோர் (5) செயலாற்றும் திறன்படைத்தோர் (6) 35க்கு மேல் 70க்கு உட்பட்ட வயதுடையோர் (7) மூவாண்டிற்குள் எந்த வாரியத்திற்கும் தேர்ந்தெடுக்கப்பெறாதோர். (8) நிறைந்த புலமை பெற்றவராயிருப்பின் அரைக்கால்வேலி நிலமுடையராயிருந்தாற் போதும்! இனி, **உறுப்பினராதற்குத் தகுதியற்றோர்** : (1) முன்பு உறுப்பினராயிருந்து கணக்குக் காட்டாமல் இருந்தோர் (2) இவர்களின் உறவினராயிருப்போர் (3) கூடத்தகாதவரோடு கூடியோர் (4) பஞ்சமா பாதகங்களில் முதல் நான்கு புரிந்தோர் (5) தீயோர் தொடர்பால் கெட்டவர்கள் (6) கொண்டது விடாத கொடியோர் (7) பிறர்பொருளைக் கவர்ந்தோர் (8) கையூட்டு (இலஞ்சம்) வாங்கியோர் (9) குற்றஞ் செய்தமைக்காகக் கழுதையில் ஏற்றப்பட்டோர் (10) கள்ளக் கையெழுத்திட்டோர் — இவர்கள், தம் வாழ்நாள் முழுதும் உறுப்பினராதற்குத் தகுதியற்றோராவர்!

ஒவ்வொரு குடும்பில் உள்ளவர்களும், உறுப்பினராதற்குத் தகுதியுடைய ஒவ்வொருவரது பெயரையும் தனித் தனியாக ஓலைத் துண்டுகளில் எழுதி, ஒன்றாகக் கட்டி, அவை எந்தக் குடும்புக்கு உரியவை என்று தெரியுமாறு அக்குடும்பின் பெயர் கொண்ட 'வாயோலை' ஒன்றைச் சேர்த்துப் பின் அக் கட்டை ஒரு குடத்தில் போடுவர். இவ்வாறே எல்லாக் குடும்புகட்கும்

தனித்தனிக் குடம் வைக்கப்படும், தேர்தல் நாளன்று அனை-வரும் ஓரிடத்திற் கூடுவர். அரசனது ஆணைபெற்ற அரசிய-லதிகாரி ஆங்கு வந்து கண்காணிப்பார். கூட்டத்திற்கு வருகை-புரிந்த நம்பிமாருள் வயது முதிர்ந்த ஒருவர், ஒவ்வொரு குடமாக மேலே தூக்கி அனைவர்க்கும் காட்டுவார். பின்னர், ஒன்றும் உணராத இளைஞன் ஒருவனைக் கொண்டு ஒரு குடும்புக்குரிய ஓலைக் கட்டை எடுக்கச் செய்து, அதனை அவிழ்த்து வேறொரு குடத்திலிட்டு நன்றாகக் குலுக்கி, அவ்வோலைகளுள் ஒன்றினை அவனைக்கொண்டே மீண்டும் எடுக்கச் செய்வர் 'மத்தியஸ்தன்' என்பான் தன் ஐவிரல்களையும் விரித்து அதனைத் தன் உள்ளங்கையில் ஏற்று அதில் எழுதப் பெற்றுள்ள பெயரை அனைவரும் அறியப் படிப்பான். பின், அப் பெயர் வேறோர் ஓலையில் எழுதப்-படும். இங்ஙனம் தேர்ந்தெடுக்கப் படுபவரே ஊர்ச்சபை உறுப்-பினர் ஆவர். பிறகுடும்புகட்கும் இவ்வாறே தேர்தல் நடை-பெறும்! எல்லா உறுப்பினர் தேர்தலும் நிகழ்ந்த பிறகே 'வாரியங்கள்' அமைக்கப்படும்!

இத்தகு செய்திகளையெல்லாம் பின்வரும் கல்வெட்டுப் பகுதியால் உணரலாம் :

"ஸ்வஸ்திஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மர்க்கு யாண்டு பனிரண்டு ஆவது உத்திரமேருச் சதுர்வேதி மங்கலத்துச் சபையோம் இவ்வாண்டு முதல் எங்களூர் ஸ்ரீ முகப்படி ஆஞ்ஞையினால் தத்தனூர் மூவேந்தவேளான் இருந்து வாரியமாக ஆட்டொருக்காலும் சம்வத்சர வாரியமும் தோட்ட வாரியமும் ஏரிவாரியமும் இடுவதுக்கு வியவஸ்தை செய்த பரிசாவது குடும்பு முப்பதாய் முப்பது குடும்பிலும் அவ்வவ குடும்பிலாரே கூடி கானிலத்துக்கு மேல் இறைநிலம் உடையோன் தன்மனையிலே அகம் எடுத்துக் கொண்டு இருப்பானையே அறுபது பிராயத்துக்கு உள் முப்பது பிராயத்துக்கு மேல்பட்டார் வேதத்திலும் சாஸ்திரத்திலும் காரியத்திலும் நிபுணரென்னப்பட்டிருப் பாரை அர்த்த சௌசமும் ஆத்ம சௌசமும் உடையாராய்

மூவாட்டினிப்புறம் வாரியஞ் செய்திலாதார் வாரியஞ் செய்தொழிந்த பெருமக்களுக்கு அணியபந்துக்கள் அல்லா தாரைக்குவோலைக்குப் பேர்தீட்டிச் சேரிவழியே திரட்டி பன்னிரண்டு சேரியிலும் சேரியான் ஒரு பேராமாறு ஏதுமுருவறியாதானொரு பாலனைக் கொண்டு குடவோலை வாங்குவித்துப் பன்னிருவரும் சம்வத்சர வாரியமாவதாகவும் .........தேவேந்த்ரன் சக்ர வர்த்தி ஸ்ரீ வீரநாராயணன் ஸ்ரீ பராந்தக தேவராகிய பரகேசரி வர்மர் ஸ்ரீ முகம் அருளிச் செய்து வரக்காட்ட ஸ்ரீ ஆஞ்ஞையினால் தத்தனூர் மூவேந்தவேளானுடனிருக்க நம் கிராமத்து துஷ்டர் கெட்டு சிஷ்டர் வர்த்தித்திடுவா ராக வியவஸ்தை செய்தோம் உத்ரமேரு சதுர்வேதி மங்கலத்துச் சபையோம்''[57]

கடமையும் பணியும் :

ஊர்ச்சபை, 'சம்வத்சர வாரியம்' முதலான பல உட் பிரிவுகளைக் கொண்டிருக்கும் என்று குறிப்பிட்டோமல்லவா! இவற்றின் கடமைகளாவன: (1) சம்வற்சரவாரியம், நீதி-விசாரணை செய்து முடிவுகூறுதல், அறங்களை ஏற்று நடத்தல், அறநிலையங்களைக் கண்காணித்தல். (2) ஏரி வாரியம் : ஏரி, குளம், ஊருணி முதலிய நீர்நிலைகளைப் பாதுகாத்தல், விளை-வுக்கு வேண்டிய நீரைப் பாய்ச்சுவித்தல். (3) தோட்ட வாரியம். தோட்டங்களையும், புன்செய்நிலங்களையும் பார்த்துக் கொள்ளு-தல். (4) பொன் வாரியம் : ஊரில் வழங்கும் பொன் நாணயங்-களை ஆராய்தல். (5) பஞ்சவார வாரியம் : அரசனுக்கு மக்கள் செலுத்தவேண்டிய நிலவரியையும் பிற வரிகளையும் வாங்கி அரசனின் கருவூலத்திற்கு ஆண்டுதோறும் அனுப்புதல் (6) கழனி வாரியம் : நன்செய் நிலங்களைக் கவனித்து வேண்டு-வன செய்தல். (7) கணக்கு வாரியம் : ஊர்க்கணக்கன், மத்தியஸ்தன் ஆகியோர் எழுதும் கணக்குகளை ஆராய்ந்து உண்மை காணுதல். (8) கலிங்கு வாரியம் : கலிங்குகளில் நீரைத் தேக்கி, உழவர்கட்குத் தேவைப்படும் நீரைக் கால்வாய்

வழியாக முறைப்படி விடுதல். (9) கூடிவழி வாரியம் : ஒவ்வோர் ஆண்டும் பயிர் நிலங்களைக் கோல் கொண்டு அளந்து, விளை நிலப்பரப்பையும், விளைபொருளையும் கணக்கன்மூலமாகக் கிராமக் கணக்கில் எழுதுவிக்கச் செய்தல். (10) குடும்பு வாரியம் : வாரியத்தில் உறுப்பினராதற்குத் தகுதியுடையவர்களைத் தேர்ந்தெடுத்துச் சொல்லுதல்.

எல்லா ஊர்ச்சபைகளிலும் இத்தகு வாரியங்கள் அனைத்துமே இருக்க வேண்டும் என்பதில்லை. அந்தந்த ஊர்க்கேற்பவும், மக்கள் தொகைக்கேற்பவும் இவ்வாரியங்கள் அமையும். சில ஊர்களில் 'சம்வற்சர வாரியம்' ஒன்று மட்டுமே அமைந்து அனைத்துச் செயல்களையும் செய்து வந்துள்ளது !

இத்தகு ஊர்ச்சபைகளில், ஊதியம் பெற்றுப் பணிபுரிந்தவர்களும் இருந்தனர். அவர்களின் பெயர்களும் பணிகளும் வருமாறு : 1) மத்தியஸ்தன் : ஊர்ச்சபையார் கூட்டம் கூடும் போது, அங்கு எடுக்கப்படும் முடிவுகளை அவர்கள் கூறியவாறே நிகழ்ச்சிக் குறிப்பில் எழுதும் பணி இவனுக்குரியது. 2) கரணத்தான் : கணக்கு எழுதும் பணியினை மேற்கொள்பவன். சபையார் விரும்பும் போது கணக்கினைக் காட்டல் வேண்டும். அங்ஙனம் காட்டும்போது, சிவக்கக் காய்ச்சிய மழுவைக் கையில் ஏந்தி, உறுதிமொழி கூறிக் காட்ட வேண்டும். அப்போது அவன் கையில் ஊறு நேராமலிருந்தால், அவனது நேர்மையைப் பாராட்டி அவனுக்கு அளிக்கப்படும் ஏழு கழஞ்சுக்கு மேல் காற் பங்குப் பொன் சேர்த்தளிக்கப்படும்; ஊறு நேருமாயின், பத்துக் கழஞ்சுப் பொன் தண்டம் விதிக்கப்படும். பொதுவாக, இவனுக்கு நாள் ஒன்றுக்கு நாழி நெல்லும், ஆண்டொன்றுக்கு ஏழுக் கழஞ்சுப் பொன்னும், இரண்டு கூறையும் ஊதியமாகக் கொடுப்பதுண்டு. இவனுக்கு உதவியாகக் 'கீழ்க் கணக்கன்' ஒருவனும் உண்டு! 3) பாடிகாப்பான் : கலகம், திருட்டு முதலான குற்றங்கள் நிகழாதவாறு ஊரைக் காப்பவன். இவனுக்கு ஊதியம் அளித்தற் பொருட்டு ஊர்மக்களிடமிருந்து 'பாடிகாவல்' என்ற 'வரி' வாங்கப்படுவதுண்டு! (4) தண்டு-

வான்: ஊர்மக்கள், அவ்வூர்ச் சபைக்கும் அரசனுக்கும் தரவேண்டிய நிலவரி போன்ற வரிவகைகளை வசூலிப்பவன். (5) அடிக்கீழ் நிற்பான்: ஊர்ச்சபையாளர்க்குக் குற்றேவல் புரியும் பணிமகன்.[58]

ஆட்சியின் மாட்சி:

பொதுவாக ஊர்ச்சபை, அவ்வூர்த் திருக்கோயில் மண்டபங்களிலேதான் நடைபெறும். சிலபோது ஊர்ப் பொதுமன்றங்களிற் கூடுவதும் உண்டு!

> "விருதராஜ பயங்கர வளநாட்டு மிழலைநாட்டு
> சேய்ஞலூர் உடையார் விஸ்வேஸ்வரதேவர் கோயில்
> மூலபருஷையர் கூட்டங் குறைவறக் கூடியிருந்து
> கிராம காரியம் வியவஸ்தை பண்ணினபடி"[59]

என்ற கல்வெட்டால் இதனை உணரலாம். சபை கூடும்போது கூடுமிடத்தையும், நேரத்தையும் ஊர்மக்களுக்கு முரசடித்தும் காளம் ஊதியும் தெரிவித்தல் உண்டு. மேலும், ஊர்ச்சபை உறுப்பினர்களின் வசதிக்கேற்பப் பகலிலோ இரவிலோ சபை கூடும்.[60] இக்காலத்தே ஊராட்சி, நகராட்சி மன்றங்கள் வரி வசூலிப்பனபோல அக்காலத்தும் ஊர்ச்சபையார், பொதுமக்கள்பால் 'சபா விநியோகம்' அல்லது 'ஊரிடு வரிபாடு' எனும் வரியினை வாங்கி வந்துள்ளனர்.

பின்வரும் கல்வெட்டுப்பகுதிகள், அக்கால ஊர்ச்சபை ஆட்சியின் மாட்சியைப் புலப்படுத்துவன:

> "...இப்படி வியவஸ்தைப்படி கூட்டஞ் செய்யுமிவர்கள் நம்மூர்க் கடமை குடிமையும் சபா வினியோகமும் வரிக் கொள்ளுமிடத்து ப்ராப்தமானபடிக்கு மேற்பட்ட வரிக் கொள்ளாதொழியக் கடவர்களாகவும், சபா வினியோகம் குடிமையுடன் கூட்டாதே தனியே வரிக்கொண்டு

கணக்கணக்கு நியோக மெழுதிக் குடுத்துநியோ கப்படியே செலவழிக்கக் கடவதாகவும், செலவழிக்கும் ...... க்கு ஒரு பொருளுக்கு இரண்டாயிரங் காசுக்கு மேற்பட்ட

துண்டாகில்

மகாசபாநியோக மெழுதிக்கொண்டு செலவழிக்கக் கடவர்-களாகவும், இப்படி தவிரச் செலவழிந்த துண்டாகிலும் ஏறவரிக் கொண்ட துண்டாகிலும் வரிக்கோளுக்கு நியோக மெழுதின சபை...கவாசறுதியாக ஒன்றுக்கு அஞ்சாக

வந்த

காசும் பேர்வழிசிகைகிடந்தபேர்களிரட்டியாக வந்த காசும் தண்டி சபாவிநியோகத்துக்குச் செலவழிக்கக்

கடவதாகவும் ....''[61]

இது, தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டம் திருச்-சேய்ஞலூரில் காணப்படும் கல்வெட்டுப் பகுதியாகும். இது, மூன்றும் இராசராசசோழன் காலத்தது. திருச்சேய்ஞலூர் மகாசபையார், ஊர்ச் செயல்களைச் செய்யுமிடத்துப் பின்-பற்றி நடத்தற்கான வழி முறைகள் இதில் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன. ''தேர்ந்தெடுக்கப்பட்ட வாரியப் பெரு மக்கள், ஊரில் கடமை, குடிமை, சபாவிநியோகம் ஆகிய வரிகளை வாங்குமிடத்து, அவரவர்கள் நியாயமாகக் கொடுக்க-வேண்டிய வரித் தொகைக்குமேல் அதிகமாக எதனையும் வாங்குதல் கூடாது; சபாவிநியோகம் என்ற வரியைக் குடி-மக்கள் கொடுக்க வேண்டிய பிறவரிகளோடு சேர்த்து வாங்-காமல் தனியாக வாங்கி ஊர்க்கணக்கனுக்கு எழுத்து மூலம் உத்தரவு அனுப்பிச் செலவிட வேண்டும்; ஒரு காரியம் பற்றி 2000 காசுகளுக்குமேல் அதிகமாகச் செலவிட நேர்ந்தால், மகாசபையாரின் அனுமதியை முன்னரே பெறவேண்டும். இவ் விதிகளின்படி செலவழிக்காமல் இவற்றிற்கு முரண்படச் செல-வழித்ததுண்டாயினும், நியாயமாக வாங்க வேண்டிய வரிக்கு-மேல் அதிகவரி வாங்கியிருப்பினும் அவற்றிற்குக் காரண-வரான வாரியப் பெருமக்கள் அத்தொகைக்கு ஐந்துமடங்கு தண்டம் கொடுத்தல் வேண்டும். குடிமக்கள் கொடுக்க-

வேண்டிய கடமை, குடிமை ஆகிய வரிகளுள் எஞ்சிநிற்கும் தொகையை ஒன்றுக்கு இரண்டாகத் தண்டம் சேர்த்து வசூலித்தல் வேண்டும். மேலே குறிப்பிட்ட தண்டத் தொகைகள் எல்லாவற்றையும் வாங்கி, சபாவிநியோகத்தோடு சேர்த்துக்கொண்டு செலவிடுதல் வேண்டும்! ' - என்ற பொருள்பட அமைந்ததே மேற்கூறிய கல்வெட்டுப் பகுதி!

**பெண்களைப் போற்றும் ஊர்ச்சபை:**

அக்கால ஊர்ச்சபை, பெண்களை எங்ஙனம் போற்றி மதித்தது என்பதற்கு ஒரு சான்று: காவிரிப் பாக்கத்து மகாசபை கூடியது. அப்போது வெண்பைக்குடி நாட்டு வெள்ளார் ஒருவர் வந்து கோரிக்கை ஒன்றினைக் கூறி அதனை நிறைவேற்றுமாறு வேண்டினர். அஃதாவது, 'அரசனுக்குச் செலுத்த வேண்டிய வரிவகைகளை வசூல் செய்யும்போது, வரி செலுத்தாத ஆண்களையும் பெண்களையும் அம்பலத்திற்கு அழைத்துச் சென்று கேட்டல் தகாது. அதிலும் பெண்களை அம்பலத்திற்குக் கொண்டு செல்வது ஆளும் அரசனுக்கும் மகாசபைக்குமே பிழைத்ததாகும்!' என்று கூறி இது தொடர்பாகத் தீர்மானம் நிறைவேற்றக் கோரினர். அதனைக் கேட்ட மகாசபையாரும் உடனே ஆலோசனை செய்து 'பெண்களை அம்பலத்திற்குக் கொண்டுபோகக் கூடாது!' என்று தீர்மானம் நிறைவேற்றினர்.

> ''......மகாசபையோம் காமக் கோட்டத்தே கூடியிருக்கப் பெருமானடிகள் அருளிப்பாட்டால் வெண்பைக்குடி நாட்டு வெள்ளார் வந்து நுங்களுக்கு எப்பேர்ப்பட்ட கரணங்களும் சங்கிராந்தியும் உவாவும் பிரிதியமும் பெருததாகவும் மற்றும் எப்பேர்ப்பட்டன காட்டுமிடத்தும் புருஷரையும் ஸ்திரீகளை
> யும் கொண்டுபோந்து அம்பலத்துப் பெருதராகவும் ஸ்திரீகளைக்கொண்டு போதுவார் பெருமானடிகளுக்கும் ஸபையார்க்கும்
> பிழைத்தாதாராகவும் இப்பரிசு வியவஸ்தையாக ஸிலோலேகை

செய்கவென்று இவ்வெண்மைக்குடி வேளார் மஹா சபையார்க்கு வந்து சொன்னமையில் எப்பேர்ப்பட்ட கரணங்களும் ஸங்கிராந்தியும் உளவாகவும் பிரதியமும் இந்நாளால் காணப்பெறப் பெருததாகவும் கரணங்கள் காட்டினவிடத்தும் மற்றும் எப்பேர்ப்பட்டது காட்டு மிடத்தும் காட்டப்பட்ட புருஷரைக் கொண்டு போருவா ராகவும் (புருஷரை) காணுவிடிலும் ஸ்திரீகளைக் கொண்டு போகப் பெருதாரகவும் கொண்டுபோந்தார் ஸபையோ-ருக்கும் பெருமானடிகளுக்கும் பிழைத்ததாராகவும்''[62]

இம் முதலாம் இராசராசன் காலத்துக் கல்வெட்டுப்பகுதி-யிலிருந்து அக்காலப் பெண்கள், குறிப்பாக வேளாளப் பெண்கள் எங்ஙனம் மதிக்கப்பட்டார்கள் என்பது தெரியவரும்.

நிலங்களும் சபைகளும்:

நிலத்தை உழுது பயிரிடல். நிலத்தை விற்றல், திருக்-கோயிலுக்குத் தானமளித்தல் முதலானவற்றில் ஊர்ச்சபை-கட்குரிய பங்குபற்றிச் சில கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. நிலங்களில் மூன்றுபோகம் விளைந்தன. அவை கார்ப்பயிர், முதற்பூ, மறுபூ என்பன. விளைந்தநெல்லில் வேலையாட்கள், காவற்காரர்கள் ஆகியோர்க்கான கூலிநெல், கட்டுநெல் முதலியவை பொதுவில் கொடுத்துத் தீர்க்கப்படும். மீதி நெல்லில் கால்பாகம் நிலச் சொந்தக்காரன் வாரமாக எடுத்-துக் கொள்வான். வைக்கோலை ஆளுக்குப் பாதியாக எடுத்-துக் கொள்வர். அரசனுக்குச் செலுத்த வேண்டிய குடிமைக்-குக் கார்ப் பயிரிலும், முதற் பூவிலும் 'மா' நிலத்திற்கு அரைப்-பணவீதமும், மறு பூவில் கால்பணம்வீதமும் தரவேண்டும். முதற்பூவில் 'மா' நிலத்திற்கு ஆறுமரக்கால் நெல்லும், மறுபூ விளைச்சலில் பாதியும் பொதுவில் முட்டுவலிச் செலவுக்காக இடவேண்டும்!'' என்ற செய்தியும் பிறவும் மாறவர்மன் குலசேகர தேவபாண்டியன் காலத்துக் கல்வெட்டொன்றில் காணப்படுகின்றது.

இதில், முடிச்சோணுட்டுப் பிரமதேயம் ஸ்ரீ ஆலங்குடி-யான ஜனனுதச் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறி மகா-சபையார் செய்த தீர்மானம் குறிப்பிடப்பட்டுள்ளது.

"இப்படி செய்யுமிடத்து இந்த வியவஸ்தை ஒழிய சபையாரில்
அழிவுசெய்தார் உண்டாகில் கிராமத் துரோகிகள் பட்டதுபடவும்,
நாட்டாரில் அழிவு செய்தார் உண்டாகில் நாட்டுத் துரோகிகள்
பட்டது படவும்''[63]

என்று வரும் இக் கல்வெட்டுப் பகுதியால், "இத் தீர்மானங்-களைச் சரிவர நிறைவேற்றி வைக்க வேண்டிய ஊர்ச்சபையார், இதில் தவறினுல் கிராமத் துரோகிகள் அனுபவிக்கிற தண்-டனையை அடைய வேண்டும். நாட்டு மக்களில் தவறு செய்-பவர் நாட்டுத் துரோகிகள் படுகின்ற தண்டனை அடைவார்-கள்'' என்ற உண்மையும் அறியலாம்.

சில ஊர்களில் விளை நிலங்களுள் ஒருபகுதி திருக்கோயிலுக்-குரிய தேவதானமாகவும், மற்றொரு பகுதி பயிரிடும் குடிமக்-களுக்குரிய வெள்ளான் வகையாகவும் இருந்துள்ளன. இத்தகு ஊர்களில் கிராம ஆட்சியை நடத்த இருவேறு சபைகள் இருந்தன என்று அறிகிறோம்

"ஆமூர்க் கோட்டத்துப் படுவூர் நாட்டுத்தேவதானம்
திருவிடவந்தை சபையோமும் ஊரோமும்
கையெழுத்து''[64]

எனவரும் கல்வெட்டுத் தொடர்கள் இதனைக் கூறும்.

'கிராமசபை' என்பது தவிர 'நாட்டுச் சபை' என்ப-தொன்றும் இருந்ததாகத் தெரிகிறது. இது பற்றித் தி. வை. சதாசிவப்பண்டாரத்தார் கூறுவது வருமாறு :

"ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் நிலவிய சபையைப் போல் ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு தனிச்சபை அந்நாட்டின் பொதுக் காரியங்களைக் கவனித்து நிறைவேற்றும் பொருட்டு அமைக்கப்பட்டிருந்தது என்பது கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் அறியப்படுகின்றது. நாட்டிலுள்ள எல்லா நகரசபைகளின் பிரதிநிதிகளையும் கிராம சபைகளின் பிரதிநிதிகளையும் தன்னகத்து உறுப்பினராகக் கொண்டதே இந் நாட்டுச்சபையாகும் ... உத்தம சோழன் காலத்திலிருந்த சிற்றரசனாகிய பழுவேட்டரையன் கண்டன் மறவன் என்பான், செம்பியன் விறைநாட்டுக் கோன் என்ற தலைவனுக்குக் காணியாக அவன் பிறந்த உறத்தூரில் சிலநிலம் வழங்கவேண்டுமென்றும், அதற்கு ஆண்டொன்றுக்கு இருபத்தைந்து பொன் மாத்திரம் வரி வழங்க வேண்டுமென்றும், நிலங்களுக்குத் தரம் வகுத்துப் புதிய வரி விதிக்க நேருங்கால் அவன் காணிக்கு வரி உயருமாறு தரம் வகுக்கக் கூடாதென்றும், தன் ஆட்சிக்குட்பட்ட நாடாகிய குன்றக்கூற்றத்திலிருந்த நாட்டுச் சபைக்கு ஓர் உத்தரவு அனுப்பிய செய்தி, திருச்சிராப்பள்ளி ஜில்லா உடையார்பாளையம் தாலுகா மேலைப் பழுவூரிலுள்ள ஒருகல்வெட்டில் உளது. அங்ஙனமே அந்நாட்டுச் சபையார் நடந்து கொண்டமை அக் கல்வெட்டால் அறியக் கிடக்கின்றது. இதனால் நிலங்களுக்குத் தரம் வகுத்தல், வரிவிதித்தல் முதலான சிறந்த உரிமைகள் நாட்டுச் சபைகளுக்கு இருந்தமை நன்கு பெறப்படுகிறது."[65]

மேற்கூறியவாறு கிராமச்சபை, நாட்டுச் சபைகள் தவிரப் 'பேரவை' என்பதொன்றும் இருந்ததாகத் தெரிய வருகிறது. மண்டலத்தில் உள்ள எல்லா நாடுகளுக்கும் உரிய உறுப்பினர்களைத் தன்பாற் கொண்டதே இப் பேரவை! ஒவ்வொரு மண்டலத்திற்கும் இத்தகு பேரவை இருந்து வந்துள்ளது. கி. பி. 13-ஆம் நூற்றாண்டில், சயங்கொண்ட சோழமண்டலத்துச் சபையார் கூட்டம் கூடி அம்மண்டலத்தில் எல்லா நாடுகளிலுமுள்ள தேவதானம், திருவிடையாட்டம், பள்ளிச்சந்தம், அகரப்பற்று, மடப்புறம், சீவிதப்பற்று, படைப்பற்று, வன்னியப் பற்று ஆகிய எல்லா நிலங்களுக்கும் வரியில் வேலி ஒன்றுக்கு

ஆறுகல நெல் தள்ளிவிடவேண்டுமென்று தீர்மானித்ததை அம்மண்டலத்தை அரசாண்ட மதுராந்தக பொத்தப்பிச் சோழன் ஒப்புக்கொண்டு ஆணைபிறப்பித்தான். இதனைக் காஞ்சிமாநகர்க் கல்வெட்டொன்று கூறுகின்றது.[66]

'நிலவரி' முதலானவற்றைச் செலுத்த முடியாமல் தம் ஊரையோ நாட்டையோ விட்டுவிட்டு வேற்றுநாட்டிற்குச் சென்று விடுவார்களானல், அன்னோர்தம் நிலங்களை அவ்வூர்ச் சபையார் கைப்பற்றிச் சபை விலையாக விற்று நிலவரிக்கு ஈடு செய்வர். கி. பி. 1117-இல் தஞ்சைமாவட்டம் வானவன்மா-தேவிச் சதுர்வேதி மங்கலத்தில் வாழ்ந்துவந்த அந்தணர் சிலர், தம் நிலவரியைச் செலுத்தாமல் தம் ஊரைவிட்டு வேற்றூர் சென்றுவிட்டனர். அன்னோர் நிலங்களை அவ்வூரிலிருந்த கிராம-சபையார் கைப்பற்றி அண்மையிலிருந்த திருச்சேறைக் கோயி-லுக்கு விற்று அரசிறை செலுத்தினர்.[67] சுத்தவல்லி நல்லூர் ஆத்திரையன் மாதேவப்பட்டன் என்பான், தன் நிலங்களுக்குப் பத்து ஆண்டுகள் வரையில் வரி கொடுக்காமல், பாண்டிய-நாட்டிற்குப் போய்த் தங்கியிருந்து அங்கேயே இறந்துபோய் விட்டான்! அவனுடைய நிலங்களைக் கி. பி. 1274 - இல் ஊர் வாரியப் பெருமக்கள் கைப்பற்றி அவற்றை விற்று அரசிறையைச் செலுத்தினர்.[68]

சிற்சில சமயங்களில் அரசியலதிகாரிகள் சிலர், தம் விருப்-பம்போல் பழைய வரிகளை மிகுதிப்படுத்தி, மக்களைத் துன்புறுத்-திய நிகழ்ச்சிகளும் நடைபெற்று வந்துள்ளன. அப்போது கொடுமைக்குள்ளான நாட்டு மக்கள் தம்மூர்க் 'கிராம சபை'-யாரிடம் முறை வேண்டிக் கொள்வதுண்டு! தஞ்சை மாவட்டம் மன்னார்குடிக் கயிலாயநாதர் கோயிலிலும், இராசகோபாலப் பெருமாள் கோயிலிலும் கி. பி. 1239 – இல் வெட்டப்பட்ட 2 கல்வெட்டுக்கள் இவ்வுண்மையைக் கூறுகின்றன :

"நம்மூர்ப் பரப்பிலே காசும் நெல்லும் ஆகப் பலரும் கைவந்தபடி தண்டிக் கொள்கையாலே எங்களுக்குத் தரிப்பறுதியாலே வெள்ளாமை செய்து குடியிருக்கப்

போவதில்லை யென்று நாட்டவர் வந்து சொல்லுகை யாலும் இப்படியாகையால் ஊர்தரிப்பறுதி உண்டாயிருக்கையாலும் நம்மூர் இந்நாள் பிரசாதஞ் செய்தருளின திருமுகப்படி தேவை செய்யுமிடத்து ...''[69]

இதில்,'' அரசியல் தலைவர் பலர் தம் விருப்ப போல் அநியாயமாக வரி வசூலிக்கும் கொடுமையைக் கண்டஞ்சிய நாட்டுமக்கள், இனி, பயிர்த்தொழில் செய்துகொண்டு தம் ஊரில் குடியிருக்கப்போவதில்லை என்று கிராமசபையாரிடம் முறையிட்டசெய்தியை அறியலாம். இம் முறையீட்டைக் கேட்ட மன்னூர்குடிக் கிராமசபையார், பக்கத்து ஐந்து நாடுகளின் மகாசபைகளையும், நம்மூர்ச்சபையையும் கயிலாய நாதர் திருக்கோயிலில் கூட்டி, அரசர் பெருமானது திருமுகப்படி பொதுமக்கள் ஆண்டுதோறும் கொடுக்க வேண்டிய முறையான வரிகள் இவ்வளவு என்பதைத் தெளிவாக வரையறுத்து உறுதிசெய்து அவற்றிற்கு அதிகமாகக் கேட்கும் எவற்றையும் கொடுக்கவேண்டியதில்லை என்றும், அதற்கு முரணாக நடப்போர் கிராமத் துரோகியும் நாட்டுத் துரோகியும் ஆவர் என்றும் முடிவு செய்தனர்'' என்பது குறிப்பிடப்பட்டுள்ளது

இவைபோன்ற இன்னும் பல செய்திகளைக் கல்வெட்டுக்கள் விளக்குகின்றன. அக்கால மக்கள் இத்தகு ஊர்ச் சபைகளால் எவ்விதக் கவலையுமின்றி வாழ்ந்து வந்தனர் என்று அறியும் போது அத்தகு நிலை இப்போது வராதா என்ற ஏக்கம் வரத்தானே செய்யும்?



# 5

## கல்வெட்டுக்களில் சமயங்கள்

தமிழ்ப் பெருமக்களின் வாழ்வில் 'சமயம்' பின்னிப் பிணைந்து இலங்குவதை நாமறிவோம் நிலப்பாகுபாடு பேச வந்த தொல்காப்பியர், 'மாயோன் மேய காடுறை உலகம்'"[10] என்று குறிப்பிடுவதிலிருந்து மூவாயிரம் ஆண்டுகட்கும் முன்னதாகவே தமிழர், தம் வாழ்வில் தெய்வ வழிபாட்டிற்கு முதலிடம் தந்துள்ளனர் எனும் உண்மையினை உணரலாம். சங்க காலச் சமயவாழ்வு குறித்துச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. இடைக்காலச் சமய வாழ்வினைப் பக்தி இலக்கியங்கள் மட்டுமன்றிக் கல்வெட்டுக்களும் நிறையப் பேசுகின்றன. ஈண்டு ஒருசில காண்போம்.

### திருக்கோயில் அமைப்பும் ஆட்சியும் :

பல்லவர் காலத்தில் செங்கற் கோயில்களாக இருந்தவை, சோழர் காலத்தில் கற்கோயில்களாக்கப்பட்டன எனும் உண்மையைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. அங்ஙனம் கற்கோயிலாக மாற்றுதற்கு முன் ஆங்குள்ள கல்வெட்டுக்களைப் படியெடுத்துத் திருப்பணி முடிந்தபின், புதிய கற்சுவர்களில் அவற்றைப் பொறித்துவிடும் வழக்கம் இருந்தது.

கோயிலில் கருவறை, மண்டபம், திருச்சுற்று, விமானம், கோபுரம் முதலான பகுதிகள் உண்டு, மூலத்தானம் தவிரத்

திருச்சுற்றுகளில் சின்னஞ்சிறிய கோயில்களும் உண்டு கோயி-லினுள்ளோ, அதனையடுத்தோ திருநந்தவனங்களும் திருக்-குளங்களும் அமைந்திருக்கும்.[71] பெரிய கோயில்களில் மடங்கள் இருந்தன; அங்குச் 'சரசுவதி பண்டாரம்' என்றதொரு நூல் நிலையமும் இருந்தது.[72]

இதற்கு கோயில்களிற்சில, ஊரவையார் மேற்பார்வை-யிலும்; சில அக்கோயிலைச் சார்ந்த மடத்துத் தலைவர்கள் ஆட்சியிலும்; சில 'ஆண்டார்' என்ற சைவ அடியார் ஆட்-சியிலும்; சில 'மகேசுவரர்' என்ற சைவத் துறவியர் ஆட்-சியிலும் இருந்து வந்தன.[73] சில பெரிய கோயில்கள், 'ஸ்ரீ காரியஞ் செய்வார்' 'கோயில்கணப் பெருமக்கள்' என்ற தனிக்-குழுவினர் ஆட்சியிலும் இயங்கிவந்தன.

கோயில் கருவூலம் 'ஸ்ரீ பண்டாரம்' எனப்பட்டது. அது-பற்றிய கணக்குப் புத்தகம் 'ஸ்ரீ பண்டாரப் புத்தகம்' எனப்-பட்டது. கோயில் வரவு செலவுக் கணக்குகள் ஆண்டுதோறும், அரசாங்க அதிகாரிகளால் தணிக்கை செய்யப்பட்டுவந்தன.[74]

தளிப் பரிவாரம்:

பல்லவர் காலத்தில் கோயில் வேலைகளில் ஈடுபட்ட அனை-வர்க்கும் 'தளிப் பரிவாரம்' என்று பெயர். கோயில் வரு-வாய், அமைப்பு, சிறப்பு ஆகிய அடிப்படையில் இத் தளிப் பரிவாரம் சிறிதாகவோ, பெரிதாகவோ இருக்கும்.

மகேந்திரவர்மன் காலத்தில் சீராளாவில் உள்ள கபோ-தீசுவரர் கோயிலில், மேற்பார்வையிடுவோர் 12 பேர் இருந்-தனர். முதலாம் பரமேசுவர வர்மன் கட்டிய கூரம்கோயிலில், பூசையைக் கவனிக்க 2 வேதியர், பாரதம் படிக்க மண்ட-பத்தைத் தூய்மை செய்து விளக்கேற்ற ஒருவர், பாரதம் படித்து விளக்க ஒருவர் - ஆகியோர் இருந்தனர்.[75] 2 - ஆம் நந்தி-வர்மன் காலத்து முந்தீச்சுவரர் கோயிலில் பூசையைக் கவனிக்க மறையவர் மூவர், தட்டளிகொட்ட இருவர், தேவரடியார் 44 பேர், இத் தேவரடியார்க்கு உணவளிக்கத் தவசிகள் எனச்

சிலர், கோயிலை விளக்கும் தளிசிகள் 12 பேர், இவர்கள் அனைவரையும் கவனித்துக் கோயில் ஆட்சியை நடத்துதற்கெனத் 'தளி ஆழ்வார்கள்' சிலர் அமர்த்தப்பட்டிருந்தனர்.[76] மாறம்பாவையரது நியமம் கல்வெட்டில் 'தளிப்பணி செய்யும் மாணிகள் என்று வந்துள்ளது.[77] "இவர்கள் கோயிலைச் சார்ந்த மடத்தில் வாசித்துக்கொண்டு கோயிற்பணி செய்து வந்த மாணவராகலாம்!"என்பர் டாக்டர் மா. இராசமாணிக்கனர்.[78] சிவன் கோயிலை மேற்பார்த்து வந்தவர்க்கு 'அமிர்த கணத்தார்' என்று பெயர்.[79] இவர்களைத் தவிரக், கணப் பெருமக்கள், மடத்துச் சத்தப் பெருமக்கள், ஊர்ச் சபையார் ஆகியோரும் கோயிலை மேற்பார்த்து வந்துள்ளனர்.[80]

## இறையிலி நிலங்கள்:

அக்காலத்தில் திருக்கோயில்களுக்கும், சமண பௌத்தப் பள்ளிகளுக்கும், அந்தணர் முதலானோர்க்கும் நிலங்களைத் தானமாக அளித்துள்ளனர். சிமன் கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிலம் 'தேவதானம்' என்றும்; திருமால் கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிலம்'திருவிடையாட்டம்'என்றும்,சைன,பௌத்தப்பள்ளிகட்கு அளிக்கப்பட்ட நிலம் 'பள்ளிச் சந்தம்' என்றும்; மடங்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் 'மடப்புறம்' என்றும்; அபூர்விகள், அந்தணர்கள், சிவயோகிகள் முதலானோர்க்கு உணவு அளிக்கும் அறச்சாலைகளுக்கு வழங்கப்பட்ட நிலம் 'சாலா போகம்' என்றும்; வேதங்களையும் சாத்திரங்களையும் நன்கு பயின்று சீலமும் புலமையும் கொண்ட அந்தணர்க்கு அளிக்கப்பட நிலம் 'பிரமதேயம்' என்றும் பெயர் பெற்றன. இவ்வகை நிலங்கள் எல்லாம் 'இறையிலி நிலங்கள்' ஆகவே இருக்கும். அஃதாவது இந் நிலங்கட்கென வரி ஏதும் செலுத்த வேண்டியதில்லை.'[81]

## சைவசமயப் பணிகள்:

சைவசமய வளர்ச்சிக்குத் தமிழகத்துப் பல்வேறு மன்னர்களும் பல்வேறு காலங்களில் பாடுபட்டுவந்துள்ளனர். கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மகேந்திர வர்ம பல்லவன், 'குடவரைக் கோயில்கள்' பல உருவாக்கினான். 'பல்லாவரம்'

எனப்படும் பல்லவபுரம், வல்லம், மாமண்டூர், மகேந்திரவாடி, தளவனூர், சீயமங்கலம், மண்டபப்பட்டு, திருச்சி மலைக்-கோயில், சித்தன்னவாசல், குடுமியான்மலை முதலிய இடங்-களில் இத்தகு கோயில்கள் காணப்படுகின்றன. இவ்வரசனுக்கு விசித்திர சித்தன், சத்துருமல்லன், லளித்தாங்குர மன்னன், மத்த விலாசன் முதலான விருதுப் பெயர்கள் உண்டு. மேற்குறித்த குடைவரைக் கோயில்களில் இப் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

"செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் என்பன இல்-லாமல் மும்மூர்த்திகட்கும் இவன் அமைத்த கோயில்" என மண்டபப் பட்டுக் கல்வெட்டால் தெரிகிறது.[82]

கீழ்க்கண்ட கல்வெட்டுப் பகுதி, வல்லம் குகைக் கோயி-லில் காணப்படுகின்றது:

"பகாப் பிடுகு லளிதாங்குரன்
சத்துரு மல்லன் குணபரன்
மயேந்திரப் போத்தரசன் அடியான்
வயந்தப்பிரி அரசர் மகன் கந்தசேனன்
செய்வித்த தேவகுலம்"

சீயமங்கலச் சிவன்கோயிலில் உள்ள இவனது கல்வெட்டு, "அவனிபாஜன பல்லவேசுரம் என்னும் இக்கோயிலை லளி-தாங்குர மன்னன் தன்னுள்ளத்தைப் பேழையாகவும், நன்மை-யை அதனுள் வைக்கும் நகையாகவும் கொண்டு அமைத்-தான்."[83] என்று பேசுகின்றது.

இவன் சைவசமயப் பற்றுடையனுய் இத்தகு கோயில்களை அமைத்தான் என்ருலும், பிற சமயங்களின்பாலும் பற்றுடை-யன் என்பதை மாமண்டூர், மகேந்திரவாடி, சிங்கவரம், நாமக்-கல் ஆகிய இடங்களில் வைணவக் கோயில்களையும், சித்-தன்னவாசலில் சமணப் பள்ளியையும் உருவாக்கினுன் என்பதி-லிருந்து தெரியலாம்!

சிறந்த சிவபக்தனான மூன்றும் நந்திவர்மன், 'நந்திக் கலம்பகம்' என்ற நூலின் பாட்டுடைத் தலைவனுவான். இவன், பொன்னேரிக்கு அடுத்த திருக்காட்டுப் பள்ளியில் ஒரு சிவன் கோயிலைக் கட்டி, ஒரு சிற்றூரைத் தேவிதான-மாக அளித்தான். திருவல்லம் சிவபிரானுக்குப் பல அறங்கள் செய்தான். இவன்மனைவி மாறம்பாவையார், நியமம் என்னும் ஊரில் உள்ள சிவன் கோயிலுக்குச் சித்திரை நாளில் திரு-வமுது செய்தருள, நெய் பால் தயிர் ஐந்து நாழியும், அரிசி பதக்கும் வாங்க ஐங்கழஞ்சும் பொன் அளித்தாள்.

மூன்றும் நந்திவர்மன் செய்த கோயில் திருப்பணிகள் பலப் பல, அவன்மட்டுமன்றி அவன் காலத்துச் சிற்றரசர்-களும் மற்றவர்களும் செய்த அறப்பணிகளும் பலவாம். வழு-வூரான் என்பவன் புதுக்கோட்டைக் குன்றுண்டார் கோயி-லில் திருவாதிரைநாளன்று 100 பேருக்கு உணவளிக்க அரிசி தானம் செய்துள்ளான். மற்றும் சிலர், திருநெய்த்தானம் சிவன் கோயிலில் நந்தாவிளக்கு எரியப் பொன் அளித்தும்; செந்-தலைச் சுந்தரேசுவரர் கோயிலுக்கு நிலமும், திருப்பராய்த்-துறைக் கோயிலில் 2 விளக்கு எரிக்கப் பொன்னும், குடிமல்லம் பரமேசுவரர்க்குத் திருநந்தா விளக்குக்கும் நெய்க்குமாக நிலமும் அளித்தனர். திருவல்லம் கோயிலுக்கு மூன்று சிற்றூர்கள் தேவதானமாக விடப்பட்டன. அங்குத் திருப்பதியம் ஓதுவார் உள்ளிட்ட பற்பல பணிகளை மேற்கொண்டவர்க்கு 2000 காடி நெல்லும், 20 கழஞ்சுப் பொன்னும் அளிக்கப்பட்டன - போன்ற செய்திகளைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.[81]

மூன்றும் நந்திவர்மனின் பேரனை அபராசிதன் காலத்தில் சிவன் கோயில் திருப்பணிகள் பல நிகழ்ந்தன. அபராசிதனின் மனைவி மாதேவியடிகள், திருவொற்றியூரில் உள்ள சிவன் கோயிலில் திருவிளக்கு வைக்க முப்பது கழஞ்சுப் பொன் அளித்தாள். இவன் காலத்தில், நம்பியப்பி என்பவன் திருத்-தணிகையில் ஒரு சிவன் கோயிலைக் கட்டினுன். அவனது அரிய செயலைப் பாராட்டுமுகத்தான் அபராசிதன் பாடிய வெண்பா

வருமாறு :

''ஸ்வஸ்திஸ்ரீ :
திருந்து திருத்தணியற் செஞ்சடையீ சற்குக்
கருங்கல்லாற் கற்றளியா நிற்க—விரும்பியே
நற்கலைக ளெல்லாம் நவின்றசீர் நம்பியப்பி
பொற்பமையச் செய்தான் புரிந்து''[85]

இப் பாடல், அச் சிவன் கோயிற் கல்வெட்டில் காட்சியளிக்கின்றது.

'வரகுண மகாராசன்' என்பான், திருச்சிராப்பள்ளி இறைவனுக்கு விளக்கு எரிப்பதற்காக 125 கழஞ்சுப் பொன் தானம் அளித்தான். அம்பாசமுத்திரத்துக் கோயிலுக்கு நாள் வழிபாட்டிற்காக 290 பொற்காசுகள் நிந்தவமாக வழங்கினான்.[86]

'இரண்டாம் வரகுணன்' என்பான், திருச்செந்தூர்த் திருமுருகப் பெருமானுக்கு ஆண்டுமுழுதும் நாள் வழிபாடு நடத்த 1400 பொற்காசுகளை நிவந்தமாக வழங்கினான்.[87] இவன் சிறந்த சைவப்பற்றுக் கொண்டவன் என்பதை இவனுடைய கல்வெட்டுக்களால் அறியலாம்.

முதலாம் இராசராசன், தஞ்சைமா நகரில் 'இராசராசேச்வரம்' எனும் கற்கோயிலை எழுப்பியதோடன்றி, இக் கோயிலுக்கு இவன் அளித்த அளவிறந்த கொடைகளைப்பற்றி இக் கோயிற் கல்வெட்டுக்கள் பறைசாற்றுகின்றன. பொன்னாலான திருப்பட்டம், தளிகை முதலான பொருட்கள்; பாசமாலை, மாணிக்கத் தாலி முதலான அணிகலன்கள்; நாள் வழிபாட்டிற்கும் பிற செல்வுகட்குமாகப் 'பாலையூர்' முதலான 50க்கு மேற்பட்ட ஊர்கள்; 1000க்கு மேற்பட்ட கால்நடைச் செல்வங்கள்; அவைகளைப் பாதுகாத்து நாள்தோறும் நெய்யளந்து கொடுக்கஇடையர்கள்; காளங்கள் முதலான திருப்பரிகலன்கள்; 'சண்டேசுவர பிரசாத தேவர்' முதலான இறைவன் திருமேனிகள்; திருப்பதியம் விண்ணப்பம் செய்ய 48 பிடாரர்கள் (ஓதுவார்கள்), உடுக்கை. கொட்டி மத்தளம் வாசிக்க 2 பேர்; கோயிலில் திருப்பணிபுரிய

400 தளிச்சேரிப் பெண்டுகள்; அவர்கட்கு இசை, நடனம் கற்பிக்க நட்டுவனார்கள்; 'கணக்கர்' முதலான நிவந்தக்காரர்கள்; கருவூலங் காக்கும் பண்டாரிகள்; திருமேனிகளைப் பாதுகாக்க 100க்கு மேற்பட்ட மெய்காப்பாளர்கள்! — இப்படி விலை மதிக்க முடியாத பொருட்களையும், பணியாளர்களையும் இராசராசன் அளித்தான் என்றால் அவனின் சைவ சமயப்பற்றை என்னென்பது?[88]

கி.பி. 1070 முதல் 1120 வரை ஆட்சிபுரிந்த முதற் குலோத்துங்க சோழனின் படைத்தலைவர்களில் ஒருவனாக விளங்கியவன் மணவிற் கூத்தன் காலிங்கராயன்! சிறந்த சிவப்பற்றுளன். இவன், மூவர் தேவாரத்தைச் செப்பேடுகளில் எழுதுவித்துத் தில்லைத் திருக்கோயிலில் வைத்தான் என்பதைப் பின்வரும் கல்வெட்டுப் பாடல் பகர்கின்றது:

"முத்திறந்தார் ஈசன் முதற்றிறத்தைப் பாடியவர்
ஒத்தமைத்த செப்பேட்டின் உள்ளெழுதி — இத்தலத்து
எல்லைக் கிரிவாய் இசையெழுதி னான் கூத்தன்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று"[89]

தேவாரத் திருப்பதிகங்கங்கள் எங்ஙனம் பாதுகாக்கப்பட்டன என்பதற்கு இக்கல்வெட்டு ஓர் அரிய சான்றாய் விளங்கு-கின்றது. "இவ்வினிய பதிகங்கள் சிவன் கோயில்களில் பூசிக்-கப்பட்டு வந்தன; அவற்றைக் கண்காணிக்கத் தமிழ் விரகர் ஒருவர் அமர்த்தப்பட்டிருந்தார்; இறைவன் திருமுன் திருப்பதி-யம் விண்ணப்பஞ் செய்தற்கென ஓதுவார்கள் இருந்தனர்; திருமுறைகள் பூசிக்கப்பட்ட இடம் 'திருக்கைக் கோட்டி' என வழங்கப்பட்டது" என்ற செய்திகளைப் பின்வரும் கல்வெட்டுப் பகுதி கூறுகின்றது :

"திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு...ஆவது இராஜராஜ வளநாட்டுத் திருக்-கழுமலநாட்டுப் பிரமதேயம் திருக்கழுமலம் கற்கடக நாயிற்று முதல் கிராம காரியஞ் செய்கிற பெருமக்களோம் ஆளுடைய பிள்ளையார்த் திருமாளிகைத் தமிழ்விரகர் கண்டு இக்கோயில்

திருக்கைக் கோட்டியில் எழுந்தருளியிருக்கின்ற திருமுறைகள் திருக்காப்பு நீக்கி அழிவுள்ளன எழுந்தருளிவிக்கவும் திருமுறைகள் எழுந்தருளுவித்தும் திருமுறை பூசித்துமிருக்கைக்கு இவ்வூர் காசு கொள்ளா இறையிலியாக இட்ட நிலம்...''[90]

எலவானுசூரில் உள்ள, சோழ அரசர் மூவரின் கல்வெட்டுக்களில் சிவன் கோயிலில் உள்ள அம்மனைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவற்றுள் முதலாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டொன்றில் பின்வரும் செய்தி உள்ளது:

> ''செயங்கொண்ட சோழ மண்டலத்து மணையிற் கோட்டத்து மணவில் அரும்பக் கிழான் அரையன் பொன்னம்பலக் கூத்தனை தொண்டைமானுர் எழுந்தருளுவித்த திருப்பள்ளி அறை நம்பிராட்டியார்க்கு நாங்கள் விற்றுக் கொடுத்த நிலமாவது''

இதனல் அம்மனின் பெயர் 'திருப்பள்ளியறை நம்பிராட்டி' என்றும், இப்பிராட்டியாரை எழுந்தருளிவித்தவன் 'தொண்டைமான்' எனப்படும் 'அரும்பக்கிழான் அரையன் பொன்னம்பலக் கூத்தன்' என்றும் அறியலாம்.[91]

இம் முதலாம் குலோத்துங்கனின் வெற்றிக்கு உறுதுணையாக இருந்த இவனுடைய படைத்தலைவர்களில் நரலோக வீரன் என்பவனும் ஒருவன். இவன், சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவன். தில்லை, திருவதிகை ஆகிய ஊர்களில் உள்ள சிவன் கோயில்கட்குப் பெரிதும் உதவிபுரிந்தவன். அக்கோயில்களின் பல பகுதிகளையும் புதுப்பித்தான். அவ்வாறு அவன் செய்த திருப்பணிகளுள் தில்லையில் உள்ள கூத்தப்பிரான் வீற்றிருக்கும் பொன்னம்பலத்தைச் செம்பொன்னல் புதுப்பித்ததும் ஒன்று. இவ்வரிய செயலை விளக்குவது, பின்வரும் கல்வெட்டுப் பாடல்:

''தில்லையில் பொன்னம்பலத்தைச செம்பொனால் மேய்ந்துவா
நெல்லையை பொந்நாக்கி நானென்பரால் - ஒல்லை
வடவேந்தர் செல்வமெலாம் வாங்கவேல் வாங்கும்
குடைவேந்தர் தொண்டையார் கொல்'' [92]

சைவத் துறவிகள் வாழ்ந்த மடங்களுக்குக் 'குகை' என்று பெயர். மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்று, 'திருஞான சம்பந்தன் குகை' யைப்பற்றிப் பேசுகின்றது. ''திருப்புத்தூர் வட்டம், சதுர்வேதிமங்கலம் என்ற ஊரில், உருத்திர கோடீசுவரமுடைய நாயனார் திருக்கோயில் தப்பிலா-வாசகன் திருமடை விளாகத்தில் உள்ள இக்குகையைக் கட்டி-யவன், 'உய்யநின்றாடுவான் கண்டன் ஆன ஈசான தேவன்' என்பவனாவான். இக்குகையில் ஆண்டார்களுக்கு (அடியவர்-களுக்கு) அன்னம் பாலிக்கப் பொன்னமராவதியைச் சேர்ந்த திருக்கொடுங்குன்றம் உடையான் கேரளராசன ஆன வீரமழ-கிய நிடிதராசன் என்பார் நிலமளித்தார். இவ்வாறே திரு-நாவுக்கரசு குகை, ஆலாலசுந்தரன் குகை, திருத்தொண்டத் தொகையான் குகை முதலான குகைகள் பல இருந்தன. இக்-குகைகளில் வாழ்ந்த சைவத்துறவிகள் உணவளித்தல் முதலான அறங்களைச் செய்து வந்தனர்; ஊர்ப் பொதுமக்களும் அத்-துறவிகளை நன்கு பேணி வந்தனர் என்பன போன்ற செய்தி-களையும் இக்கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. [93]

சுந்தரர் காலத்தையொட்டியே திருக்கோயில்களில் 'தே-வாரம்' எனப்படும் 'திருப்பதியம்' ஓதுதற்கு வழிவகை செய்-துள்ளனர் என்பதையும் கல்வெட்டுக் கழறுகின்றது : மூன்றாம் நந்திவர்மன், தன் 17-ஆம் ஆட்சியாண்டில், திருவல்லம் கோயிலுக்கு மூன்று ஊர்களை 'விடேல்விடுகு விக்கிரமாதித்தச் சதுர்வேதிமங்கலம்' என்று பெயரிட்டுத் தேவதானமாக விட்-டான். அவ்வூரினின்றும் ஆண்டுதோறும் 2000 காடி நெல்-லும் 20 கழஞ்சுப் பொன்னும் வருமானம் வரும்; இவ் வருமா-னத்தில் திருப்பள்ளித் தாமம் பறிப்பார்க்கு, திருப்பதியம் பாடு-வார் உள்ளிட்ட பல பணி செய்வார்க்கும் நானூற்றுக் காடி

நெல் ஒதுக்கப்பெற்றது.[94]

முருகனின் ஆறுபடை வீடுகளின் முதலாவது திருப்பரங்குன்றம். நக்கீரரால் புகழப்படும் இப்பரங்குன்றத்தில் மூன்று குகைகள் இருக்கின்றன. இரண்டு குடைவிக்கப்பட்டவை; ஒன்று. இயற்கையாக அமைந்த குகைத்தளம் இப்போது முருகனின் பெருங்கோயிலாக விளங்குவது. கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் பராந்தக நெடுஞ்சடையன் என்ற பாண்டியன் காலத்தில் உருவாக்கப்பட்டது. இது, திருமால், முருகன், கணபதி, துர்க்கை, சிவபிரான் ஆகிய தெய்வங்களுக்காக அமைக்கப்பட்ட குடைவரைக் கோயில்! இம்மலையின் பின்புறம் மற்றொரு குடைவிக்கப்பட்ட குகைக்கோயில் உள்ளது. அது சிவபெருமானுக்காக அமைக்கப்பட்டதாகத் தெரியவருகிறது. மலையின் ஒருபுறத்தே இயர்கையாக அமைந்த குகைத்தளம் ஒன்று உள்ளது. அதில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.[95]

வைணவம்

அக்காலத்தில், சைவ சமய வளர்ச்சிக்கு எத்துணையளவு பாடுபட்டார்களோ அத்துணையளவு வைணவ சமய வளர்ச்சிக்கும் பாடுபட்டார்கள். இவ்வுண்மையைப் பல கல்வெட்டுக்கள் விளக்குகின்றன.

சென்னையைச் சார்ந்த திருவல்லிக்கேணியில் உள்ள பார்த்தசாரதி சுவாமிகோயிலில் காணப்படும் கல்வெட்டுச் செய்தி வருமாறு: "தந்திவர்ம பல்லவன் காலத்தில், இக் கோயிலில் பணிபுரிந்த குலங்கிழார்கள், கருமாரச்சேரி என்ற ஊரில் உள்ள கோயில் வயல்நிலங்களில் ஒரு பகுதியை ஒற்றி வைத்துவிட்டனர். அதனால், அந் நிலத்தினின்றும் கிடைக்கக் கூடிய 45 காடி நெல் வருமானம் குறைந்து விட்டது. அந் நெல்லுக்குரிய வட்டியும் இல்லாது போயிற்று. கோயில் இறைவனுக்குத் திருவமிர்து செய்யத் தடையேற்பட்டது. தந்திவர்மனின் அரசியல் அலுவலர்களில் ஒருவனை புகழ்த்துணை விசையரயன், இதனை அறிந்து 30 காடி நெல்லும்

5 கழஞ்சுப் பொன்னும் கொடுத்து இந் நிலத்தை மீட்டுத் தனக்குரிமையாக்கினன். இந்நிலத்து வருவாயினின்றும் 45 காடி நெல்லைக் கோயிலுக்குத் தானமாகத் தந்தான். அந்த நெல்லினின்றும் நாள் 1க்கு வட்டியாக வரும் 5 நாழி நெல்லைக் கொண்டு, குற்றித் தீட்டி 2 நாழி அரிசியாக்கி, இறைவனுக்கு நாள்தோறும் இரவு திருவமிர்து படைக்க வேண்டும் எனக் கோயில் அலுவலர்களை வேண்டிக் கொண்டான். மேலும் இவன், இக்கோயிலுக்கு ஈழ விளக்கு, வட்டில், உலோகபாணை என்ற மூன்றும் தானமாகத் தந்தான். இது குறித்த கல்வெட்டின் ஒரு பகுதியாவது :

"...திருவல்லிக்கேணி குலங்கிழார்கள் கருமாரச் சேரிப்புலம்
ஒற்றியிட்டு நாற்பத்தைங் காடி நெல் பொலியூட்ட
திருவடிகட்கு திருவமிர்து முட்ட புகழ்த்துணை விசெய்
யரையன் முப்பதின்காடி நெல்லும் ஐங்கழஞ்சு
பொன்னும் குடுத்து மீட்டுத் தனதாக்கி...
புகழ்த்துணை விசையரயன் தர்மமிது..."[26]

முதலாம் பராந்தக சோழனது காலத்தில், மதுரையை அடுத்த யானைமலையிலுள்ள நரசிங்கப் பெருமாள் திருக்கோயிலில் ஒரு கல்வெட்டுக் காணப்படுகின்றது. "இக் கோயிலுக்குக் 'கீழ் இரணிய முட்டம்' என்ற பகுதி தேவதானமாக விடப்பட்டிருந்தது. இப்பகுதியில் அமைந்த 'பிரமதேயம்' நரசிங்க மங்கலம் ஆகும்! முதலாம் பராந்தகனின் அரசியல் அதிகாரிகளில் ஒருவனாகிய மருதூருடையான் அருணிதிக்கலியன் என்பவனுக்குப் பின்வரும் சாசனம் ஒன்றை நரசிங்கமங்கலத்து ஊர்ச் சபையார் செய்து கொடுத்தனர் :

திருவானைமலை நரசிங்கப் பெருமாள் கோயிலிலிருந்து, அக் கோயில் நிலங்கட்கு வரியாக, ஊர்ச்சபையார்க்கு ஆண்டு தோறும் 18 ஈழக்காசு தரவேண்டும். ஆனால், அவ்வூர்ச் சபையார் ஷ கோயிலிலிருந்து 15 ஈழக்காசு கடன் வாங்கியிருந்தனர். இக் கடனுக்காக 6 ஈழக்காசுகள் வட்டிதர வேண்டியிருந்தது. 18 ஈழக்காசில் 6 ஈழக்காசு போக எஞ்சிய 12

ஈழக்காசுகளையும், தானே ஊர்ச்சபையார்க்குத் தருவதாக அருணிதிக் கலியன் உடன்பட்டு, அதற்கென ஒ  தொகையை மூலதனமாக வைத்தான். அதன் வருவாயிலிருந்து வரும் வட்டி மூலம் வரியைச் செலுத்திக் கோயில் நிலத்தை 'இறையிலி' நிலமாக்கினன். மேலும் 'ஊருடையான் குளம்' என்ற ஏரியையும் வாங்கி, அதையும் இறையிலி நிலமாக்கினன். இவை தவிர இரண்டு வேலி நன்செய்நிலம் வாங்கினன். இதில் விளையும் 300 கல நெல்லை ஊர்ச்சபையார் பெற்றுக் கொண்டு, இதில் பாதியாகிய 150 கல நெல்லால், நாள்தோறும் நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவனுக்கு மூன்று வேளை திருவமிர்து படைக்க வேண்டும் என்றும், எஞ்சிய 150 கல நெல்லை வேதப் பிராமணர் ஐவர்க்கு, நாள்தோறும் உணவளிக்க வேண்டும் என்றும் ஏற்பாடு செய்தான். கோயில் மேற்பார்வையாளரோ, ஊர்ச்சபை உறுப்பினரோ இப்பணி முறையாக நடப்பதற்குத் தடை ஏற்படுத்துவராயின், அவர், அப்போது ஆட்சிபுரியும் அரசனுக்கு இரண்டு பொற்காசு தண்டம் கொடுக்க வேண்டும்; அக்காசு கொண்டு கோயிலுக்குத் திருவிளக்கு ஏற்றிவைக்க வேண்டும். ஊர்ச்சபையார் செய்யத் தவறினுல் ஆறு பொற்காசுகள் தண்டமளித்தல்வேண்டும்.

இவ்வாறு நரசிங்கமங்கலத்துச் ஊர்ச்சபையார், மருதூருடையான் அருணிதிக் கலியனுக்கு உறுதிசெய்து கொடுத்ததாகக் கல்வெட்டுக் கூறுகின்றது. அதன் ஒருபகுதி வருமாறு:

'......நரசிங்கமங்கலத்துச் சவையொஞ் சொழப் பொருமானடிக ளதிகாரிகள் சொழநாட்டுப் புறங்கரம்பை ஞட்டு
மருதூர் மருதூருடையா னருணிதி கலியனுக்கு
ஒட்டிக்குடுத்த பரிசாவது எங்களூர்த் திருவாணைமலை
நரசிங்கப் பெருமானடிகள் தமுடைய நிலத்தால்
சவை யொழுக்கு ஆண்டெடுத்துஇடக் கடவ ஈழக்
காசு பதினெட்டு...... திருவாணைமலை நரசிங்கப் பெருமானடிகளுக்கு சிரிகாரிய மாராய்வாரும் சவயொழும்
இதிற் றிரம்பிஞேமைச் சவைய்யாரும் சிறிகாற்றிய

> மாராய்வானுந்திறமிளான் நிசதி இறுகாசு அன்றும் கொவினுக்குத் தண்டம் பட்டு அக்காசு கொண்டு தெவர்க்குத் திருவிளக்கு எரிவதாகவும் சவையார் திரம்பில் ஆறுகாசு தண்டப்படுவதாகவும் ஒட்டிக் குடுத்தொம்......''[97]

திருக்கோயிலிலிருந்து ஊர்ச்சபையார், தேவைப்படும்போது வட்டிக்குக் காசு பெறுவதுண்டு என்பதை இக்கல்வெட்டு உணர்த்துகின்றது. 'மணிமங்கலம்' என்ற மற்றோர் ஊர்க் கல்வெட்டும் இச் செய்தியை உறுதிப்படுத்துகின்றது.

சோழப் பெருநாடு ஒன்பது மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றில் ஒன்று 'தொண்டை நாடு' எனப்படும் 'சயங்கொண்ட சோழமண்டலம்'. இம் மண்டலத்தைச் சார்ந்த, செங்காட்டுக் கோட்டத்தின் ஒரு பிரிவு மாகணூர் நாடு. இதனைச் சேர்ந்த ஊரே 'மணிமங்கலம்'. இதற்கு 'இராசசூளாமணிச் சதுர்வேதி மங்கலம்' என்ற பெயரும் உண்டு. இவ்வூர்ச் சபையார், முதலாம் இராசாதிராசனின் 29 ஆவது ஆட்சியாண்டு, மார்கழித் திங்கள் (தனுர் நாயறு) வளர்பிறைக்காலம், துவிதியையும் புதன்கிழமையும் கூடிய திருவோண நட்சத்திர நாளன்று, பிரம்மத் தானத்தே குறைவறக் கூடிப் பின்வரும் செயலைச் செய்தனர்: ''இவ்வூரில் உள்ள 'காமக் கோடி விண்ணகர் ஆழ்வார்' திருக்கோயில் இறைவனுக்குத் திருவமிர்து படைப்பதற்கும், அர்ச்சகர் மானியத்திற்கும் ஏற்பாடு செய்ய விரும்பி, அக்கோயில் கருவூலத்திலிருந்து 100 காசு வட்டிக்குக் கடனாக வாங்கினர். அவ்வட்டிக்கு இறைகரத்துட்டாக (நிலவரி அனுபவிக்கும்படி) 2,200 குழி நிலத்தைக் கொடுத்து அந் நிலத்துக்குரிய எல்லைகளையும் வரையறை செய்தனர்!''

> ''...ஜயங்கொண்ட சோழமண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து மாகணூர்நாட்டு மணிமங்கலமான ராஜசூளாமணிச் சதுர்வ்வெதி மங்கலத்து மஹாஸபையோம் எம்மூர் ப்ரஹ்மஸ்தானத்தே தனு நாயற்று

பூர்வ்வ பக்ஷத்து த்விதியையும் புதன்கிழமை யும் பெற்ற திருவோணத்தி நாள் கூட்டக் குறைவறக் கூடியிருந்து பணிப்பணியால் பணித்த இவ்வூர் ஸ்ரீமத் த்வாராபதியான ஸ்ரீகாமக்கோடி விண்ணகர் ஆழ்வார்க்கு திருவமுதுக்கும் அர்ச்சனை போகத்துக்கும் இத்தேவர் பண்டாரத்தே நூறுகாசு பொலிசைக்கு கொண்டு, இக்காசு நூற்றுலும் வந்த பொலிசைக்கு இறைகரத் தூட்டாக இறையிழிச்சிக் குடுத்த நிலமாவது......''[98]

வீரராசேந்திரன் காலத்துக் கல்வெட்டு ஒன்று செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருமுக்கூடலில் காணப்படுகின்றது. அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் திருமால் திருக்கோயிலுக்கு ஆண்டு தோறும் ஆகும் செலவுகளையும் அவற்றை நடத்துவதற்காகக் கிடைக்கும் வருமானங்களையும் அக்கல்வெட்டு விளக்குகின்றது. 'வீரசோழன்' பெயரால் ஆதுலர்சாலையும், மருத்துவம் கற்பிக்கும் கலாசாலையும் இருந்தன. அவற்றை அக் கோயில ஆட்சியாளர் நிர்வகித்து வந்தனர். அவ் ஆதுலர் சாலையில் ஓராண்டிற்கு வேண்டிய மருந்து வகைகள் இருந்தன; மருத்துவன் ஒருவனும், சல்லியக்கிரியை பண்ணுவான் ஒருவனும் பரம்பரை உரிமை பெற்றுப் பணிபுரிந்து வந்தனர்; நோயாளிக்குத் துணிபுரிய மருத்துவப் பணிமகளிர் பலர் இருந்தனர். ஆங்குப் பணிபுரிந்த மருத்துவனுக்குக் கோதண்டராமன் அசுவத்தாம பட்டன் என்று பெயர்.[99]

சிவன் கோயில்களில் தேவாரம் விண்ணப்பம் செய்ய நிவந்தங்கள் விடப்பட்டமைபோலத் திருமால் கோயில்களில் 'திருவாய் மொழி' விண்ணப்பம் செய்ய நிவந்தங்கள் விடப்பட்டன. முதல் இராசாதிராசனது 30-ஆம் ஆண்டுக்கல்வெட்டொன்று திருபுவனியில் உள்ளது. ''உம்பள நாட்டு மூவேந்த வேளான் இராசேந்திரன் திருநாமத்தால் எடுப்பித்த மண்டபத்தில் அவ்வூர்ச் சபையார் கூடினர். சேனாபதி இராசேந்திர சோழ மாவலி வாணராசர், சில அறங்களை நடத்துதற்காகக் கொடுத்த 72 வேலி நிலத்தைப் பெற்றுக் கொண்டனர். நில வருவாய் 12,000 கலம். இதில் திருவிழாக்கள் நடத்தவும்,

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவு அளிக்கவும், திருவாய்மொழி விண்ணப்பம் செய்யவும் 2,475 கலம் நெல் பயன்படுத்தப் பட்டது. எஞ்சிய நெல், ஒரு பெரிய கல்லூரி நடத்தப் பயன் படுத்தப்பட்டது,[100] இவ்வாறே சோழ மன்னர்கள் காலத்தில் திருவாய்மொழி விண்ணப்பம் செய்தற்கும் பல திருப்பதிகளில் ஏற்பாடு செய்யப்பட்டது!

விசயநகர மன்னன் வீரபிரதாப சதாசிவராயர் காலத்தில் (கி. பி. 1545) பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்று திருச்சி-யை யடுத்த திருவரங்கநாதர் கோயிலில் காணப்படுகின்றது. ஔக்குத் திருவேங்கடயங்கார் என்பவர், திருவரங்கநாதருக்-காகத் தரப்பட்ட தில்பதியைக் காவிரியாறு மூழ்கடிப்பதைக்-கண்டு அதைத் தடுப்பதற்காக எடுத்த நடவடிக்கைகளை அக் கல்வெட்டுக் குறிக்கின்றது. நாராயன ஜீயர் அத்தகைய வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகள் எடுக்கையில் திருச்சிக்கு அருகில் உள்ள சிந்தாமணி ஊர்மக்களுக்கு இன்னல் விளை-விக்கும்பே ல் இருந்தது. எனவே அவர்கள் அரசன்பால் முறை-யிட்டனர். அரசன் ஜீயரை அழைத்துச் 'சந்நியாசியாக இருக்-கும் நீங்கள் இப்படி பிராமண இம்சை செய்யலாமா?' என்று வினவினன். அதற்கு ஜீயர் 'ஒரு நல்ல காரியம் செய்யச் சில தவிர்க்க முடியாத பாவம் செய்யலாம்' என்று கீதையில் உள்ளது என்று விடை பகர்ந்தார். அரசன் அதைக் கேட்டு மகிழ்ந்து ஜீயர் செய்தது சரி எனத் தீர்ப்பளித்தான்!

"தென்கரை பாண்டிகுலாசனி வளநாட்டு விழாவருவீதி (விதி)
வளநாட்டு திருவரங்கந் திருப்பதி ஸ்ரீ ரங்கநாத தேவர்
ஸ்ரீ பண்டாரத்துக்கு ... நலந்திகழ் நாராயண ஜீயர் திருவரங்கன்
திருப்பதியை யாறு கொள்ளுகிறது கண்டு .... அது கேட்டு சோழன்
சந்தோஷித்து இதுவே நிணவாநால் இந்தப் பாவம்
அடிக்கழஞ்சு பொன் பெறுமென்று ஸ்ரீ இரங்கநாத தேவர்க்கு
தாரை வாத்துகொடுத்ததுக்கு ..."[101]

### சமணம்

தமிழ்நாட்டில் இயற்கையாக அமைந்த குகைத்தளங்களைச் சமணத் துறவிகள் தங்கள் வாழ்விடங்களாகக் கொண்டிருந்தனர். அத்தகு மலைப் பாறைகளிலும், குன்றுகளிலும் அவர்களைப்பற்றிய கல்வெட்டுக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

மதுரைக்கருகே மீனாட்சிபுரம் (அரிட்டாபட்டி) என்னும் சிற்றூர், ஒரு மலையடிவாரத்தே உள்ளது. இங்குள்ள குகைத் தளங்களில் படுக்கைகள் உள்ளன. மேல் பாறையில் நீண்ட கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவற்றின் காலம் கி.மு. 3-2ஆம் நூற்றாண்டு. சமண சமயத்தைச் சார்ந்த "கணி நந்தஸிரியக்குவன் (இயக்கன்) என்பவருக்கு நெடுஞ்செழியன் பள்ளி அமைத்துக் கொடுத்தது; அதே பெரியாருக்கு நெடுஞ்செழியனின் சாலகன் (சகலன்) இளஞ்சடிகனின் தந்தை சடிக்ன் என்பான் பள்ளி அமைத்துக் கொடுத்தது; வெள்ளறை நிகமத்தைச் சேர்ந்த காவிதி கழிதிக அந்தை என்பவரின் மகன் பிணவு என்பவனும், சந்தரிதன் என்பவனும், வெள்ளறை நிகமத்தோரும் இப் பெரியவருக்குப் படுக்கை அமைத்துக்கொடுத்தமை" ஆகிய செய்திகள் இக் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன.

> "கணிய் நந்தஅ ஸிரிய் இகுவ்அன் கே தம்மம் இத்தஅ
> நெடுஞ்செழியன் பணஅன் கடல்அன் வழுத்திய்
> கோட்டுபித்த அ பளிஇய்.
>
> "கணிய் நந்த ஸிரிய்குஅன் தமம்இத நெடிஞ்சழியன்
> ஸாலகன் இளஞ்சடிகன் தந்தைய் சடிகன் செஇய பளிய்.
>
> "கணிஇ நத ஸிரிய்குவ" வெள்அறைய் நிகமது காவிதிஇய்
> கழிதிக அந்தைஅ ஸ-தன் பிணஊ கொடுபிதோன்;
>
> "சந்தரிதன் கொடுபிதோன்"
>
> "வெள்அறை நிகமதோர் கொடிஓர்" [102]

என்பனவே அக்கல்வெட்டுக்கள்!

இதேபோன்று மிகப் பழமையான கல்வெட்டொன்றை — அதாவது கி.மு. 2 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டொன்றைத் தமிழக அரசு தொல்பொருள் துறையினர் அண்மையில் கண்டுபிடித்துள்ளனர். கரூரிலிருந்து ஏறத்தாழ 28

கல் தொலைவில் 'ஐயர்மலை' எனப்படும் 'இரத்தினகிரீசுவரர்மலை' ஒன்று உள்ளது மலையின் மேல் சிவபெருமானுக்கு வரலாற்றுச் சிறப்புமிக்க கோயில் ஒன்றும் இருக்கின்றது. இம் மலையின் ஒரு பகுதியில் 3 குகைத் தளங்கள் உள்ளன. மூன்றுவது குகைத் தளத்தில் சமணப் பெரியார்களுக்காக ஆறு படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒரு படுக்கையில் தலைப் பகுதியில் பின்வரும் கல்வெட்டு வெட்டப்படுள்ளது:

ப ஊ து றை வே ஸ ன் அ த ட் அ ன ம்

"பஊத்துறை என்ற ஊரைச் சார்ந்த வேஸன் என்பாருடைய இருக்கை" என்பது இதன் பொருள்.[103]

சமணத் துறவிகள் உண்ணா நோன்பிருந்து உயிர்துறந்தமை நாமறிவோம். இது பற்றிய கல்வெட்டொன்று, செஞ்சியின் ஒரு பகுதியில் உள்ள திருநாதர் குன்றில் காணப்படுகின்றது.

"ஐம்பத்தேழ னசனந் தோற்ற
சந்திரநந்தி ஆசிரிகர்
நிசீதிகை"[104]

என்பதே அது! "சந்திரநந்தி என்றும் சமணப் பெரியார் 57 நாட்கள் உண்ணா நோன்பு இருந்து உயிர்நீத்த இடம்" என்பது இதன் பொருள்.

"வட்டெழுத்தின் வளர்ச்சியை அறிய இஃது இன்றியமையாத கல்வெட்டு ஆகும்" என்பர்.[105]

இவைபோன்ற சமணப்பெரியாரைப்பற்றிய கல்வெட்டுக்கள் பலப்பலவாம்!

சயங்கொண்ட சோழமண்டலம் படுவூர்க் கோட்டம் வகைமுகை நாட்டைச்சேர்ந்த ஊர்களில் 'வைகவூர்' என்பதும் ஒன்று. இது, 'பள்ளிச் சந்தமா'க விடப்பட்டதாகும். இங்குள்ள திருமலையில் 'குந்தவை சினலயம்' என்ற சைனர்கோயில் உள்ளது. இக்கோயில் முதலாம் இராசராசனின் தமக்கையாராகிய குந்தவைப் பிராட்டியார் பெயரால் அமைக்கப்பட்டதாதலின் இதற்குக் 'குந்தவைசினலயம்' என்று பெயர்.

தொண்டை மண்டலத்துப் பெரும்பாணப்பாடியைச் சேர்ந்த கரைவழிமல்லியூர் என்ற ஊரில் நன்னப்பயன் என்பான், பெரு வணிகனாக விளங்கினான். அவன் மனைவி சாமுண்டப்பை என்பாள், குந்தவை சினாலய இறைவனுக்குத் திருநுந்தாவிளக்கு ஒன்று அன்பளிப்பாக அளித்து, அதன் செலவுக்கு இருபது காசுகளும் கொடுத்தாள். அன்றியும் அவ்விறைவன் திருவமுதுக்குப் பத்துக் காசுகளும் கொடுத்தாள்.

இச் செய்தியைப் பின்வரும், முதலாம் இராசேந்திரசோழன் காலத்துக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது :

> "......ஜயங்கொண்ட சோழ மண்டலத்து பங்களநாட்டு நடுவில் வகைமுகை நாட்டுப் பள்ளிச் சந்தம் வைகவூர்த் திருமலை ஸ்ரீகுந்தவை ஜிநாலயத்து தெவற்குப் பெரும்பாணப் பாடிக்கரை வழி மல்லியூர் இருக்கும் வ்யா-பாரி நந்நப்பயன் மணவாட்டி சாமுண்டப்பை வைத்த திருநந்தா விளக்கு ஒன்றிநுக்குக் காசு இருபதும் திருவமுதுக்கு வைத்த காசு பத்தும்"[106]

இங்ஙனம், கல்வெட்டுக்களை நாம் ஆராய்ந்தால் நம் பண்டைத் தமிழர்கள் மேற்கொண்ட சமய வாழ்க்கை, நெறி முறைகள் ஆகியன அறிந்தின்புறலாம்!



# 6

## கல்வெட்டுக்களில் இலக்கியம்

நமதினிமைத் தமிழ்மொழியில் எண்ணிலா இலக்கியங்கள் உள்ளன. இவற்றில் அக்காலத் தமிழர்தம் நாகரிகம், பண்பாடு, வாழ்க்கை நெறி ஆகியன மட்டுமன்றி அரிய வரலாறுகளும் இடம் பெற்றுள்ளன. என்றாலும் இவற்றிற் சொல்லப்படும் வரலாற்றினை, வரலாற்றுப் பேராசிரியர்கள் அப்படியே உண்மை என ஏற்றுக் கொள்வதில்லை. கல்வெட்டுக்கள் இக்குறையை ஒருவாறு போக்குவன எனலாம். கல்வெட்டுக்கள், தமிழ் இலக்கியங்களிற் காணப்படும் செய்திகளுக்கு அரண் செய்கின்றன. அவற்றுட் சிலவற்றை மட்டும் இங்குக் காண்போம்.

**பதிற்றுப் பத்து :**

சங்க இலக்கியங்களில் ஒன்றான 'பதிற்றுப் பத்து', சேரப் பெருமன்னர்களின் வரலாற்றை அறியப் பெருந்துணை புரிவது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செங்கெழு குட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், கடல் பிறக்-கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செல்வக் கடுங்கோ வாழியாதன், தகடூரெறிந்த பெருஞ்சேர-லிரும்பொறை, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை ஆகியோரைப் பற்றிய குறிப்புக்களை இந்நூல் இனிது காட்டும்.[107] இங்குச் சுட்டப்படும் பெயர்களால், 'கோ', 'இரும்பொறை',

'ஆதன்' முதலான சொற்கள் சேரகுலத்தைக் குறிப்பன என்றறியலாம். இத்தகு சேரமன்னர்கள் பற்றி மிகப் பழமை-யான கல்வெட்டொன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அது வருமாறு :

"ஞகன் மகன்ளங்கீரன்"

"மூதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன்...

"கோ ஆ...... ல்லிரும்புறை மகன் பெருங்
கடுங்கோன் மகன் கடுங்கோன் ளங்கடுங்
கோ ளங்கோ ஆக அறுபித கல்"

"தா அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறைய்
கோஆதன் செல்லுரும்பொறை மகன்
பெருங்கடுங்கோன் மகன் ளங்
கடுங்கோ ளங்கோ ஆகி அறுத்த கல்"
"கொற்றந்தை ளஎய் முன்று"[108]

திருச்சி மாவட்டம் கருவூரிலிருந்து பத்துக்கல் தொலைவில் உள்ள புகளூரில் ஆறு நாட்டார் மலை உள்ளது. அங்-குள்ள குகைத்தளத்தில் இக்கல்வெட்டுக்கள் காணப்படுகின்-றன. சேரன் இளங்கடுங்கோ 'இளங்கோ' பட்டம் எய்திய போது யாற்றூரைச் சேர்ந்த செங்காயபன் என்பவருக்கு உறை-விடம் கொடுத்ததை இரு கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. இக்-கல்வெட்டுக்களில் சேர மன்னர்களுடைய மூன்று தலைமுறைகள் குறிக்கப்பட்டுள்ளன; இவை சிறந்த வரலாற்றுச் செய்திகளாகும்.

'கோ ஆதன் செல்லிரும் பொறை'

'பெருங் கடுங்கோன்'

'இளங் கடுங்கோன்'

என்று தந்தை, மகன் என்னும் உறவில் குறிக்கப்படுகின்றன. இக் கல்வெட்டுக்களை மிகவும் தெளிவாகப் படித்து விளக்கியவர் திரு. ஐ. மகாதேவன் ஆவர்! அவர் கூறுவது, நம் பண்டை இலக்கியப் பெருமைக்கு வலுவூட்டுகின்றது:

"கோ ஆதன் செல்லிரும்பொறை மகன் பெருங்கடுங்கோன், அவன் மகன் இளங்கடுங்கோன் என்பவனும் இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களில் 'ஆதன்' என்றும் 'செல்' என்றும் பெயர் கொண்டவன் சங்க காலச் சேர மன்னர்களில் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற ஒரு மன்னனே ஆகும். பதிற்றுப் பத்தில் ஏழாம்பத்தின் பாட்டுடைத் தலைவன் அவனே. ஆதலின், புகளூர்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள 'கோஆதன் செல்லிரும்பொறை'யே பதிற்றுப் பத்தின் ஏழாம்பாட்டின் தலைவனை 'செல்வக் கடுங்கோ வாழியாதன்' என்பதில் ஐயமே இல்லை! இதிலிருந்து, புகளூர்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள பெருங்கடுங்கோவும், இவன் மகன் இளங்கடுங்கோவும் பதிற்றுப் பத்தில் வரும் 'பெருஞ்சேரல் இரும்பொறை'யும், 'இளஞ்சேரல் இரும்பொறை'யும் ஆவர். இவர்களே எட்டாவது, ஒன்பதாவது பாட்டுக்களின் தலைவர்களாவர். 'பெருஞ்சேரலிரும்பொறை'யே 'பாலை பாடிய பெருங்கடுங்கோ' என்றும், 'இளஞ்சேரலிரும்பொறை'யே 'மருதம் பாடிய இளங்கடுங்கோ' என்றும் ஒரு வழிவழிக் கருத்து உண்டு. இதிலிருந்து இவர்கள் 'பெருங்கடுங்கோ' என்றும் 'இளங்கடுங்கோ' என்றும் பெயர் பெற்றிருந்தனர் என்பது தெளிவு. ஆதலின் புகளூர்க் கல்வெட்டில் குறிக்கப்படுவோர் இவரே!" [109]

புறநானூறு :

சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய புறநானூறு, புலவர்கள், அப்புலவர்களால் புகழப்பட்ட புரவலர்கள் ஆகியோரது வரலாற்றைப் புகலும் ஒப்புயர்வற்ற நூலாகும். கடையெழுவள்ளல்களில் ஒருவனாகிய அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடிய பாடல்கள் பல புறநானூற்றில் உள்ளன. "ஆர்கலி நறவின் அதியர் கோமான் 'போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி'" [110] என்பது புலவர் புகழுரை. இவ்வள்ளலின் வழித்தோன்றல் 'விடுகாதழகிய பெருமாள்' என்பவனைப் பற்றிய கல்வெட்டொன்றில் அதியமானைப் பற்றிய குறிப்பும் உள்ளது எண்ணத்தக்கது!

"வஞ்சியர் குலபதி யெழினி
வகுத்த வியக்க ரியக்கியரோ
டெஞ்சிய வழிவு திருத்தி
யெண்குண விறைவனை மலைவைத்தான்
அஞ்சிதன் வழிவரு மவன்முத
விகலதிகன வகைநூல் (?)
விஞ்சையர் தகைமையர் காவலன்
விடுகா தழகிய பெருமாளே!"[111]

இக்கல்வெட்டு, வடஆர்க்காடு மாவட்டம் போளூருக்கருகில் உள்ள திருமலையில் காணப்படுகின்றது.

இவ்வாறே வேள்பாரி வள்ளலைக் கபிலர் பெருமான், 'தேர்வண் பாரி தண்பறம்பு நாடே'[112] எனப் பலவாறு புகழும் பாடல்கள் புறநானூற்றில் உண்டு என அறிவோமன்றே! பாரிமகளிரைத் தக்கார்க்கு மணம் செய்விக்க விரும்பிய கபிலர், விச்சிக்கோனுழைக் கொண்டு சென்று,

"கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரிமகளிர்"[113]

எனப் புகழ்ந்து பேசியதையும் புறநானூறு புகலும். இறுதியில் அம்மகளிரைப் பார்ப்பார்ப்படுத்து, வடக்கிருந்து உயிர் துறந்தார் கபிலர். இப் பண்டைவரலாற்றை, முதல் இராசராச சோழன் ஆட்சியில் கி. பி. 1012-இல் வரையப்பட்ட கல்வெட்டொன்று, தீந்தமிழ்ப் பாட்டால் தெளிவுறுத்துகின்றது :

"வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரிதன் னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
அலைபுன லழுவத் தந்தரிட் சஞ்செல

மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல்புகும் கபிலக் கல்லது...[114]

இத்தகு ஒப்புரவாளராகிய கபிலர் உயிர்துறந்ததை நினைவு கூர்தற்பொருட்டுப் பெண்ணையாற்றங்கரையில் ஒரு கல் நடப்பட்டது; அதற்குக் 'கபிலக் கல்' என்று பெயர். இவ்வுண்மையைத் தான் மேற்காட்டிய கல்வெட்டுச் செப்புகின்றது!

சிலப்பதிகாரம் :

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில், பல்வகைக் கூத்துக்களைப் பற்றி நாம் அறிகின்றோம். அவற்றுள் ஒன்று, 'கொட்டிச் சேதம்' என்பது.

''உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்து''[115]

என்பர் இளங்கோவடிகள். இவ்வகைக் கூத்துக்கள், திருக்கோயில்களில் நிகழ்த்தப் பெற்றன என்பதைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

''திருவாலந்துறை நல்லூரில் அற்பசித் திங்களில் திருவிழாவில் அசுவதி நாளில் சாக்கைக்கூத்து மூன்று அங்கங்கள் நிகழ்த்த ஆலையூர்ச்சாக்கைக்கு $1\frac{1}{2}$ கழஞ்சுப் பொன்னும் மூன்று கல நெல்லும் கொற்று அளித்ததை'' க் கீழைப்பழுவூரில் பரகேசரிவர்மனது 6-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டால்[116] அறியமுடிகின்றது.

பெரியபுராணம் :

திருத்தொண்டர் பெருமையினைப் பாடவந்த தெய்வச் சேக்கிழார், தமது பெரியபுராணத்தில்,

"நீதி வழுவா நெறியினராய் நிலவுங் குடியால் நெடு-
நிலத்து
மீது விளங்குந் தொன்மையது மிழலை நாட்டுப் பெரு-
மிழலை"[117]

என 'மிழலை நாட்டை' க் குறிப்பிடுகின்றார். இம் "மிழலைநாடு எனப்படுவது சோழமண்டலத்திலிருந்த ஒன்பது வளநாடுகளுள் ஒன்றாகிய இராசேந்திர சிங்க வளநாட்டின் உள்நாடுகளுள் ஒன்று என்பது கல்வெட்டுக்களாற் புலனாகின்றது!" என்பர் தி. வை. சதாசிவப்பண்டாரத்தார்.

திருஞானசம்பந்தப் பெருமானுக்குத் திருவரத்துறை-யின்கண் இறைவன் முத்துச்சிவிகை அருளினான் என்பதைச் சேக்கிழார்,

"முத்து நற்சிவி கைமுத லாயின
உய்த்த ளிக்கும் படிமுன் உணர்த்துவார்"[118]

குறிப்பிடுவர். இந்நிகழ்ச்சிக்குத் தென்னாற்காடுமாவட்டத்தைச்-சேர்ந்த திருவடத்துறைக் கல்வெட்டொன்று பக்கத்துணையாக நின்று பறைசாற்றுகின்றது. இக் கல்வெட்டு விசயநகர அரசர் இரண்டாம் தேவராய மகாராயர் (கி. பி. 1443) காலத்திய-தாகும். இதில், திருவடத்துறை இறைவனின் பெயர், 'திரு முத்தின் சிவகை கொடுத்தருளிய நாயனார்'[119] எனக் குறிக்கப்-பட்டுள்ளது! இக் கல்வெட்டில் காணப்படும் திருவடத்துறை-தான் பெரியபுராணத்தில் கூறப்படும் 'திருவரத்துறை' என்பது புலப்படுகின்றதல்லவா?

'மெய்ப்பொருள் நாயனாரி'ன் மேன்மைகள் குறித்து இனிமையாகப் பாடுவோர் சேக்கிழார்!

"சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக ரன்பின் வழிபடு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை
பூண்டு
காதலா லீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார்"[120]

முதலாம் இராசேந்திர சோழனது ஆட்சிக்காலத்துக் கல்வெட்டொன்று, தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ளது. பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் என்பவன். இக் கோயிலில் மெய்ப்பொருள் நாயனார்க்கு ஒரு பிரதிமம் செய்துவைத்தான்; ஓர் உருத்திராக்க மாலையும் அன்பளிப்பாக வழங்கினான். அம்மாலை பொன் எடையுடன் அரைக்கழஞ்சு, நான்கு மஞ்சாடி, ஒரு குன்றி எடையுடையதாயிருந்தது. இதனைக் கூறுகின்றது இக்கல்வெட்டு:

"...ஸ்ரீ கார்யஞ் செய்கின்ற பொய்கைநாடு
கிழவன் ஆதித்தன் ஸூர்யன்ஞன தென்னவன்
முவெந்த வெளான் யாண்டு மூன்றுவதுஉரை
செய்வித்த செப்புப்ரதிமங்கள்...த்தா நமரெகாண
என்று மிலாடுடையார் ஒருவர்....."[121]

பெரியபுராணத்தில் "நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்றார் நீண்ட கையால், தறைப்படு மளவில் தத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார்"[122] மெய்ப்பொருள் நாயனார் என்பர் தெய்வச் சேக்கிழார்! 'தத்தா நமர்' என்ற தொடரில் அமைந்துள்ள பொருள் ஆழத்தைத் தென்னவன் மூவேந்த வேளான் எண்ணி எண்ணிப் பார்த்துத் தன் நெஞ்சைப் பறிகொடுத்தாள். அதனால் உண்டாயதே இக் கல்வெட்டு!

இலக்கண நூல்கள் :

இலக்கியங்களைப்பற்றி இயம்பும் கல்வெட்டுக்கள், ஒருசில இலக்கண நூல்களைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன.

ஐந்திலக்கணங்களில் ஒன்று 'யாப்பருங்கலக்காரிகை' என்பது அனைவரும் அறிந்ததே! இந்நூலினைப்பற்றி நீடூரில் உள்ள, முதற் குலோத்துங்க சோழனின் (கி.பி. 1070—1120) கல்வெட்டொன்று குறிப்பிடுகின்றது. "கண்டன் மாதவன் என்பான் நீடூரின்கண் அழகு பொருந்திய விமானத்தை அமைத்தான்!" என்று பேச வந்தபோது, "காரிகை என்னும் நூலை இயற்றுமாறு அமுதசாகர முனிவைத் தூண்டிய ஒருவனின் மருமகனே கண்-

டன் மாதவன்'' என்று மொழிகின்றது. இதிலிருந்து, காரிகை-யை எழுதுமாறு தூண்டிய ஒருவன். முதற்குலோத்துங்க சோழன் காலத்திய கண்டன் மாதவனின் மாமனார் என்பதும், அம் மாமனார் காலத்தில் எழுதிய காரிகை ஏறக்குறைய அக் கண்டன் மாதவனின் காலத்தையோ அல்லது சிறிது காலம் முந்தியதாக-வோ. இருத்தல் வேண்டும் என்பதும் உண்மை. எனவே காரிகையின் காலம் முதற்குலோத்துங்கனின் காலமாகிய கி.பி. 12-ஆம் நூற்றாண்டாக இருக்க வேண்டும் என்பது துணிபு!''[123]

தொல்காப்பியப் புறத்திணையியலில் வெட்சித் திணையின் ஒரு துறையாக 'ஆகோள்' பேசப்படுகின்றது; அங்ஙனம் ஆவி-னைக் கொள்ளும்போது அந்நாட்டு வீரர்கள் எதிர்த்து அவ் 'ஆ பெயர்த்துத் தருதல்' உண்டு; அப் போரில் 'வாள் வாய்த்துக் கவிழ்தலு'ம் உண்டு.[124] பிற்காலத்துத்தோன்றிய 'புறப்பொருள் வெண்பாமாலை'யிலும் இத்தகு துறைகள் இனிது மொழியப்-படுகின்றன.[125] இவ் விலக்கணக் கருத்துக்களுக்கு அரண் செய்-வன அக்காலத்து நடுகற்கள்! பசுக்களை மட்டுமன்றி எருமைகளை-யும் கைக் கொள்ளுதல் வழக்கம் என்பதைப் பின்வரும் 'நடுகல் கல்வெட்டுக்கள்' சான்று பகர்கின்றன :

''கோவிசைய நரசிங்க பருமற்கு இரண்டாவது
வாணகோஒ அதிரைசர் சேவகர்
மீ கொன்றை நாட்டு மேல் வேளூர் ஆளும்
பணையமாரியார்
இவ்வூர்த் தொறுக் கொண்ட ஞான்று பட்டா(ர்)''[126]

— இஃது 2ஆம் நரசிம்மவர்மனின் (கி. பி. 8ஆம் நூற்.) தா. வேளூர் நடுகல்லில் உள்ளது.

''...ஸ்ரீ கோவிசைய கம்ப பருமற்கு
யாண்டு மூன்றாவது
வயிரமேக வாணகோவரையர் சேவகன்
மீகுன்றை நாட்டு மலையனூருடைய செம்பத்

தொண்டன் மகன் காரிப்பெருமான்
பாசாற் றெருமைத் தொறுஎயினுட்டார் கொள்ளப்
பாசாற்றூர் பூசலிடப் பூசல் சென்று
கோவூர் நாட்டுச் சிற்றிடையாற்று
முதுகொன்றை மூக்கின் மீமலை அயங்கயக்கரையிற்
சென்று முட்டி
மலையனூருடைய செம்பர் மகன்னுன காரிப் பெரு
மான்னன் உரையிலம்புமாள எவ்விப் பத்திரமுருவி
எதிரே சென்று பட்டான்.''[127]

—இது, பல்லவ மன்னன் கம்பவர்மனின் 3 - ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு. 'மேல் கொன்றை நாட்டு மேல் வேளூரை ஆண்ட பணையமாரியார் என்பார் பாண அரசர்க்காக ஆநிரைகளைக் கவர்ந்தபோது வீரமரணம் எய்தியதை'' யும்; ''மலையனூரில் வாழ்ந்த செம்பத் தொண்டனின் மகன் காரிப்பெருமான். இவன் வாண கோவரையரின் சேவகன் பாசாற்றூரைச் சேர்ந்த எருமை நிரைகளை எயில் நாட்டார் கவர முற்பட்டபோது அவர்களை எதிர்த்துக் காரிப் பெருமான் போரிட்டான். அப்போரில் அவன் இறந்துபட்டான் என்பதை'' யும் இவ்விரு கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

இனி, நன்னூலை யாத்த பவணந்தியார், 'அமரா பரணன் சீய கங்கன்' என்ற மன்னனின் அவையில் இருந்தார் என்பதைப், பின்வரும்பாயிரம் பகர்கின்றது:

''திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக, முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்''

இதில் குறிப்பிடப்படும் அமராபரணன் சீயகங்கனைப்பற்றி, 3 - ஆம் குலோத்துங்க சோழனின் காலத்திய கல்வெட்டுக்கள் பேசுகின்றன. செங்கை மாவட்டக் காஞ்சிபுரக் கல்வெட்டொன்றும், ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த சித்தூர் மாவட்டத்தில் உள்ள காளகத்தி, அகத்திய கண்ட ஆகிய

ஊர்களில் காணப்படும் கல்வெட்டுக்களும் சீயகங்கனைப் பற்றித் தெரிவிக்கின்றன. இவற்றால், தமிழிலக்கண நூல் நன்னூலின் காலத்தைக் கி. பி. 12 - ஆம் நூற்றாண்டின் இறுதி என்றோ, கி. பி. 13 - ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்றோ கூறலாம்!

இவ்வாறு, தமிழகத்தில் உள்ள எண்ணற்ற கல்வெட்டுக்களைத் துருவிப் பார்த்தால், இப்போதுள்ள நூல்களைப் பற்றி மட்டுமன்றி, நம்மால் பேணிப் பாதுகாக்கப்படாமல் அழிந்துபோன நூல்களைப்பற்றியும் அறிந்து கொள்ள முடியும்!



# 7

## கல்வெட்டுக்களில் அளவைகளும் அணிகலன்களும்

அக்காலத்தே பழக்கத்திலிருந்த பல்வகை அளவை முறைகளையும், அணியப் பெற்ற அணிகல வகைகளையும் கல்வெட்டுக்களால் அறிய முடிகின்றது, அவற்றுள் ஒருசில மட்டும் இவண் காண்போம்.

**நிறுத்தலளவை :**

பொன்னை நிறுப்பதற்கு 'ஆடவல்லான்' அல்லது 'குடிஞைக் கல்' என்னும் நிறை கல்லும்; இரத்தினங்களை நிறுப்பதற்குத் 'தட்சிணமேரு விடங்கன்' என்னும் நிறை கல்லும் தஞ்சைப் பெரிய கோயிலில் இருந்தனவாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. கழஞ்சு, மஞ்சாடி, குன்றி, மா, பலம் முதலான நிறுத்தலளவைப் பெயர்கள் வழங்கி வந்தன. 2 குன்றிமணி = 1 மஞ்சாடி; 20 மஞ்சாடி = 1 கழஞ்சு; 1/20 = 1 மா.

**நீட்டலளவை :**

முழம், சாண், விரல், தோரை முதலானவை நீட்டலளவைப் பெயர்கள் சோழர் காலக் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. தோரை = 1 நெல் அளவு; 8 தோரை = 1 விரல்; 12 விரல் = 1 சாண்; 2 சாண் = 1 முழம் கோயிலில் உள்ள

திருமேனிகள் 'கோயில் முழம்' என்ற நீட்டலளவையால் அளக்கப்பட்டதாகத் தெரிகிறது.

முகத்தலளவை :

கலம், தூணி, பதக்கு, குறுணி (மரக்கால்), நாழி, உழக்கு, உரி முதலானவை முகத்தலளவைப் பெயர்களாகும். உரி = $\frac{1}{2}$படி; உழக்கு = $\frac{1}{4}$படி; 2 உழக்கு = 1 உரி; 2 உரி = 1 நாழி; 8 நாழி = 1 குறுணி அல்லது மரக்கால்; 2 குறுணி = 1 பதக்கு; 2 பதக்கு = 1 தூணி; 3 தூணி = 1 கலம். 'ஆடவல்லான்' என்பது நிறுத்தலளவைக்கு மட்டுமன்றி, நெல் அளப்பதற்குரிய முகத்தலளவைக்கும் பெயராக இருந்தது. 'இராசகேசரி' என்பதும் முகத்தலளவைக் கருவியே! இவ்விரண்டும் ஒரே அளவைகள். அஃதாவது '8படி' கொள்ளும் மரக்கால்கள். இம் முகத்தலளவைப் பெயர்களில் கலம், குறுணி, தூணி முதலானவற்றை முறையே ஐ, ந, த என்ற குறியீட்டு எழுத்துக்களால் குறித்தனர் என்று தெரிய வருகின்றது.

எண்ணலளவை :

மேற்கூறிய அளவைகள் தவிர 'ஒன்று' முதல் 'ஆயிரம்' ஈருகவுள்ள எண்ணுப் பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன.

பின்வரும் கல்வெட்டுப் பகுதி, மேற்கண்ட விவரங்களை அறிய ஒரு சிறு சான்றாகும் :

"குடுத்த பொன் ஆடவல்லான் என்னுங் குடிஞைக் கல்லால்
நிறை எடுத்தும் ரத்நங்கள்...தக்ஷிணமெரு விடங்கன் என்னுங் காசுகல்லால் நிறை எடுத்தும்...முப்பத்தறு கழஞ்செ மஞ்சாடியுங் குன்றியும்..."[130]

"செப்பு ப்ரதிமங்கள் உடையார் கொயிலில் முழத்தால் அளந்தும்
ரத்நங்கள் தக்ஷிணமெரு விடங்கநென்னுங்கல்லால்

நிறை எடுத்துங் கல்லில் வெட்டின பாதாதி கேஸாந்தம் இருபதிற்று விரல் உசரத்து...''[131]

''பயிரெழுத முதல் கொண்ட நிலத்துக்கு மாத்தாலி கல நெல்
தாழ்த்து மாத்தால் ஐங்கலனெ இருதூணிப் பதக்கு நானுழி நெல்லிறுப்பதாகவும்''[132]

நில அளவை :

நில அளவைப் பெயர்களாக வேலி, காணி, மா, முந்திரிகை முதலாயின ஆளப்படுகின்றன. 1/320 = 1 முந்திரிகை; 100 குழி = 1 மா; 4 மா = 1 காணி; 5 காணி = 1 வேலி. இவை தவிரக் 'குடிதாங்கிக் கோல்' என்னும் நிலமளக்கும் அளவு-கோலும் இருந்ததாகச் சுந்தரபாண்டியன் சாசனம் செப்பு-கின்றது.[133]

அக்காலத்தில் கோயில்தோறும் வேறுவேறுபட்ட முழக் கோல்கள், நிறைகற்கள் இருந்தன. அரசன் பெயரால் 'மரக்கால்' இருந்தது.

அணிகல வகைகள் :

தஞ்சைப் பெரியகோயிலிற் காணப்படும் இராசராச சோழ-னுடைய கல்வெட்டுக்களால் அக்காலத்து அணிகல வகைகளை அறிய முடிகின்றது. அவையாவன : திருப்பட்டம் அல்லது வீரப் பட்டம் (நெற்றியில் அணிவது); திருப்பள்ளித் தொங்கல் மகுடம் (கிண்கிணி ஆரம் போன்ற தொங்கல்களுடன் கூடிய கிரீடம்), வண்ணிகைத் திருக்கொற்றக்குடை மகுடம் (பல நிலங்களுடன் கூடிய நல்ல வெற்றிக்குடை); திரள்மணிவடம் (மாலை); திருக்கைக்காறை (கையணி); திருவடிக்காறை (கால் அங்கி); திருப்பட்டிகை (இடுப்பில் அணிவது); முத்து வளையல்; திருமுடி; திருமாலை; ஸ்ரீசந்தம்; திருப்புறக்குடை (முதுகுப்புற அணி); தாலைத் திருப்பட்டிகை; கண்ட நாண் (கழுத்தணி); பாசமாலை; பொற்கொடி; பொற்காளம்; மாணிக்கத்தாலி; வாகு

வலயம் (தோளணி); பதக்கம்; இரத்தின வளையல்; இரத்தினக் கடகம் (கையணி ; பவழ கடகம்; முத்து உழுத்து; மாணிக்க உழுத்து; வயிர உழுத்து; சோனகச் சிடுக்கின் கூடு; இரத்தின மோதிரம்; நவரத்தின மோதிரம்; பிருச்ட கண்டிகை; திருப்பொற்பூ; திருநயனம் முதலியன.

இரத்தின வகைகளாக முத்து, பவளம், மாணிக்கம், நீலம், மரகதம், கோமளம், களகளம், குணவியன், பளிங்கு, பொத்தி முதலான பலவகைகள் சொல்லப்படுகின்றன. முத்தின் வகைகளாக முத்துவட்டம், அனுவட்டம், ஒப்பு முத்து, குறுமுத்து, நிம்பளம், பயிட்டப், அம்புமுது கறடு, இரட்டை, சப்பத்தி, சக்கத்து, குளிர்ந்த நீர், சிவந்தநீர், தைப்புமுத்து, புஞ்சமுத்து தோல் தேய்ந்த முத்து, பழமுத்து ஆகியனவும் பேசப்படுகின்றன இவற்றில் வரை, கறை, குரு, சுப்பிரம் முதலான குற்றங்கள் உடையனவும் உண்டு. இவ்வாறே வயிரங்களிலும் பலவகை உண்டு. அவை, மட்டதாரை, மட்டதாரைச் சவக்கம், மட்டதாரைச் சப்படி என்பன. இவற்றில் பொறிவு, முறிவு, இரத்த பிந்து, காகபிந்து, வெந்தன எனப்படும் குற்றங்கள் உடையனவும் உண்டு. அங்ஙனமே மாணிக்கத்திலும் பலவகை உண்டு. அவை, களகளம் குணவியன், களசளம், கோமளம், நீலகந்தி, தளம், என்பன. இவற்றிலும் குற்றமுடையன உள. அவை, குழிவு, பிரகரம், வெச்சம், திராசம், கற்பற்று என்பன.

இவ்வணிகலன்களில் சரடு, சட்டம், செப்பாணி, அரக்கு, பிஞ்சு, பந்தம் முதலான உறுப்புக்களும் பொருத்தப்பட்டிருக்கும். இவ்விரத்தினங்களைத் 'தட்சிணமேரு விடங்கன்' என்ற நிறை கல்லால் நிறுக்குங்கால், சரடு, சட்டம், செப்பாணி இவற்றை நீக்கி விட்டு, அரக்கு, பிஞ்சு, பந்தம் உட்பட நிறுப்பர் எனத் தெரிகின்றது. பொன்னை 'இத்தனை மாற்றுத் தங்கம், என்று மாற்றுக் கண்டுபிடிக்கும் வழக்கமும் இருந்தது!

"தைத்த முத்துவட்டமும் ஒப்புமுத்தும் நிம்பொளமும்
குளிர்ந்த நீரும் வரையும் கறையும் குருவும் சுப்பிரமும்

திரங்கலும் உடையன உட்பட முத்து ஒன்பதினால்"[134]

என்பது முதலாம் இராசேந்திர சோழன் காலத்துக் கல்வெட்டுப் பகுதியாகும். இக்கல்வெட்டிலும், பிறகல்வெட்டுக்களிலும் மேற்கண்ட செய்திகள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

மேற்கூறிய அணிகலன்களைத் தவிர ஸ்ரீ பலித்தாலம், பொன்தளிகை, பொன்மண்டை, பொன்கிடாரம், முதலான பல்வகைப் பாத்திரங்களைப் பற்றியும், உடுக்கை, கொட்டிமத்தளம் முதலான இசைக் கருவிகளைப் பற்றியும் இன்னும் பல கல்வெட்டுக்கள் மூலம் அறிந்தின்புற முடியும்!



# 8

## கல்வெட்டுக்களில் சுவையான செய்திகள்

அரிய பல செய்திகளையோ, சுவையான செய்திகளையோ அறிய விரும்பினால் அதற்கும் கல்வெட்டுக்கள் பெரிதும் துணை-புரிகின்றன. எங்ஙனம் எனக் காண்போம்.

நாய்க்கு ஒரு கல்வெட்டு :

'நாய்' நன்றியறிதலுடைய ஒரு விலங்கு. "யானை அறிந் தறிந்தும் பாகனையே கொல்லும் — எறிந்தவேல் மெய்யதா வால் குழைக்கும் நாய்" 135 என நாயின் நன்றியறிதலை நாலடியார் பாராட்டும். இத்தகைய நாயின் நன்றியறிதலை நினைந்த நம் முன்னோர்கள், இதற்கும் ஒரு கல்வெட்டை வெட்டியுள்ளனர்!

"கோ விசைய மயிந்திர பருமற்கு
முப்பத்து நான்காவது
வாணகோ அரைசரு மருமக்கள்
பொற்றெக்கைஆர் இளமகன்
கருந்தேவக்கத்தி
தன்னெருமைப் புறத்தே
வாடி பட்டான் கல்"

"[கோவி ]ன் னென்னுந் நாய்
இரு கள்ளனைக் கடித்துக்
காத்தி ந்த வாறு"[13]

வட ஆற்காடு மாவட்டம், எடுத்தனூர் என்னும் சிற்றூர்க்கு அருகே அமைந்த 'ஊமை வேடியப்பன்' கோயிலில் வழிபடப் படும் தெய்வமாகிய நடுகல்லில் காணப்படும் கல்வெட்டு இது! கி. பி, 7. ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த மகேந்திர வர்மனின் 34 - ஆம் ஆண்டில் நிகழ்ந்த ஒரு போரைப்பற்றியும், அப்போரில் இறந்துபட்ட வீரர்களைப்பற்றியும், அவனுக்கு உறு-துணையாக இருந்து, கடைசிவரையில் போராடித் தலைவனோடே உயிர்நீத்த ஒரு நாய் பற்றியும் இக்கல்வெட்டுத் தெரிவிக்-கிறது. வாணகோ அரைசருடைய மருமக்கள் பொற் றெக்கை-யாரின் இளமகன் கருந்தேவக்கத்தி என்பான் தன் எருமை-களின் பக்கலிலே மாண்டான். 'கோவிவன்' என்ற பெயருடைய நாய், எருமைக் கூட்டத்தைக் கவரவந்த கள்ளர்களோடு போராடித் தன் தலைவனோடு உயிர் விட்டது! அந்த நாயின் தியாகத்தைப் பாராட்டி அதனையும் கல்லில் பொறித்தனர் நம்முன்னோர்!

படையில் 'பெண்':

இக்காலத்தே போர்ப்படை வீரருள் பெண்களும் இருக்-கின்றமை போல அக்காலத்துப் படையிலும் இருந்தனர் எனக் கல்வெட்டுக் கூறுகின்றது. முடியுடை வேந்தர்களும், குறுநில மன்னர்களும் தமக்கென்று 'வேளக்காரப் படை' ஒன்றை வைத்-திருந்தனர். அப்படையில் ஆண்களும் பெண்களும் இருந்-தனர்.

மலையமான் நாட்டு பன்னனுன 'எதிரிகள் நாயன்' என்பா-னுடைய வேளக்காரப் படையில், 'தேவப் பெருமாள்' என்பவளும் இருந்தாள். அவள், தன் அரசன் இறந்த பிறகும், தன் கணவன் இறந்த பிறகும் தான் உயிர் வாழ்வதில்லை என்ற உறுதி பூண்டிருந்தாள்! இவ்வரிய செயலைச் சொல்லுகிறது பின்வரும் கல்வெட்டு:

' ஸ்வஸ்திஸ்ரீ (இராஜ) ரா (ஜ) மலையகுலராயநான

நீரேற்ற

பெருமாளான எதிரிகள் நாயநுக்கு இவ் வேளக்காரியான
தேவப் பெருமாளேன் எதிரிகள் நாயனுக்குப் பின்பு

இருந்

தேநாகில் என்மாடு ஒட்டி மாற்கு மண்டைய்யு மிட்டு
இவர்களுக்கு நீநங் குடுத்து இவர்கள் கலச்சோற்றையும்
உண்கிறேன் என்மிணுளன் ஒடு என்னைச் சாவ வேண்டா
மென்பார் என்மிணுளன் எறுகிற குதிரைக்குப் புல்லு

இடும்

காமிகந் எதிரிகன் நாயக முதுமையானுக்கு தன்
மிணுட்டியையுங் குடுப்பான் நாஞ்செய்ா திருந்தேநாகில்
என்னை நெருப்பில் கட்டி புகடுதல் கொல்லுதல் செய்தவன்
தன்னெட்டையாற்கு தந் மிணுட்டியையும் குடுத்து என்
மிணுளன் ஏறுகிற குதிரைக்கு புல்லு இடுகிற காமிசநான
எதிரிகள் நாயக முதுமையானுக்கு தன் மிணுட்டியை

குடுப்பான்

என்னைக் கண்டால் கொல்லாதான்.''[137]

— இது மூன்றும் குலோத்துங்கன் காலத்தது. எலவானுசூர்க் கோயிலில் காணப்படுவது. தன் அரசன் இறந்தபிறகோ, தன் கணவன் இறந்தபிறகோ தான் உயிர் வாழ்ந்தால் தனக்கு எத்தகைய கேடு வரவேண்டும் என்பதை மிகக் கடுமையான சொற்களால் வஞ்சினம் உரைக்கிறுள் இப்பெண் என்பதை இக்கல்வெட்டுக் காட்டுகின்றது!

**அறியாமற் செய்த குற்றம்:**

'அறியாமல் ஏதேனும் குற்றம் செய்துவிட்டால் தண்டனை உண்டா?' என்று கேட்பது வழக்கம். இதற்கு மூன்றும் இராசராசசோழன் காலத்துக் கல்வெட்டொன்று விடை பகர்கின்றது:

'' ... வாண பிராட்டியிலிருக்கும் ஆறிக் குளத்தூருடையான் முடிகொண்டான் காரியாந வீரபாலநேன் ... நான் பன்றி

> கொண்டு இராப்போர்வை வேட்டை போட இடத்துப் பன்றியை
> எய்யாநிற்கப்பிழைத்து இத்திலையாந் ஆருயிரப் போயனை
> அம்புபட்டுப் பட்டமையில் இவநுக்கு நன்றாக இதேவர்
> கோயில் நான் வைத்த திருநுந்தா விளக்கு ஒன்று ...''[138]

—இது, எல்வானூர்ச் சிவன் கோயிலில் உள்ளது. "ஆறிக்குளத்தூருடையான் முடிகொண்டான் காரி எனப்படும் 'வீரபாலன்' என்பான், ஒருநாள் இரவு நேரத்தில் பன்றிவேட்டைக்குச் சென்றான். காட்டுப் பன்றியை நோக்கி அவன் விடுத்த அம்பு, குறிதவறித் 'தில்லை ஆருயிரப் போயன்'' என்பவன் மீது பாய்ந்தது. இதனால் போயன் மாண்டான். எனவே அறியாமல் நேர்ந்த இப்பிழைக்குக் கழுவாயாக, வீரபாலன், எலவானூர்ச் சிவபெருமானுக்கு நந்தா விளக்கு ஒன்று அமைத்து, அதற்கு முதற்பொருளாக 32 பசுக்களைத் தானமாக வழங்கினான்!'' என்ற செய்தியை விளக்குகிறது இக்கல்வெட்டு!

தலை அரிந்தவனுக்கு நடுகல் :

போர்க்களத்தே வீர மறவர்கள், தம் தலைகளை அறுத்துப் பலியிடுவர் என்பதை இலக்கியங்கள் பேசும். இத்தகு அரிய நிகழ்ச்சியொன்றை ஒரு கல்வெட்டுப் புகல்கின்றது : "பல்லவ மன்னன் கம்பவர்மனின் 20-ஆவது ஆட்சியாண்டில் 'பட்டை பொத்தான் என்பான் போரில் வெற்றி பெறவேண்டும்' என்பதற்காக 'ஒக் கொண்ட நாகன் ஒக்கதிந்தன்' என்பான் தன் தலையினை அரிந்து பிடரியின் பீடத்தில் வைத்தான். அத்தகு பெருவீரனுக்குத் திருவான்மூர் ஊரார் பறைகொட்டி, கல் நட்டுச் சிறப்புச் செய்தனர். நிலமும் கொடையாக அளிக்கப்பட்டது. இக்கொடைக்கு மறுப்புத் தெரிவிப்பவர் கங்கைக் கரையிலிருந்து குமரிக்கரை வரையில் இடைப்பட்ட எழுநூறு காதத்திலும் உள்ளோர் செய்த பாவம் அனைத்தும் அடைவர். மேலும் அப்போது ஆட்சிபுரியும் மன்னனுக்குக் கால்பொன் தண்டமும் தரவேண்டும்!'' — இச் செய்தியைக் கூறுவது பின்வரும் கல்வெட்டு :

"ஸ்ரீ கம்ப பருமற்கு யாண்டு இருபதாவது
பட்டை பொத்தனுக்கு ஒக்கொண்ட நாகன் ஒக்கதிந்தன்
பட்டை பொத்தன் மேதவம் புரிந்ததென்று படாரிக்கு
நவக்கண்டங் குடுத்து குன்றகத்தலை அறத்துப்
பிடலிகைமேல்
வைத்தானுக்கு திருவான்மூர் ஊரார் வைத்த பரிசாவது
... ..."[139]

பண்புக்கு ஒரு நடுகல் :

தமிழ்ப்பண்பினை எடுத்துக்காட்டும் வகையில் ஒரு நிகழ்ச்சி! தகடூர்ப் பகுதியை 'மாவலிவாணராயர்' என்பவர் ஆண்டு வந்தார். 'நுளம்பன்' என்பவன் அவருடைய உறவினன் போல் நடித்து, வஞ்சித்து அவரது நாட்டைக் கைப்பற்றினான். இதனால் இருவருக்கும் போர் நிகழ்ந்தது. அதில் மாவலிவாணராயர் மாண்டு போனார். அப்போது அவர்தம் மனைவி கருவுற்றிருந்தாள். 'சங்கரக் குட்டியார்' என்பவர், அத் தேவியைக் காப்பாற்றி அவளுக்கு ஆண்மகவு பிறந்தபின், படையொன்றைத் திரட்டித், தன் தலைவனை வஞ்சித்துக் கொன்ற நுளம்பன் மீது போர் தொடுத்தார். அப் போரில் சங்கரக் குட்டியாருடன் உதவிக்குச் சென்ற 'நாகந்தைச் சிறு குட்டியார்' என்ற வீரன் இறந்துபட்டான். அத்தகு நன்றிமறவாப் பண்பாளனுக்கு 'நடுகல்' ஒன்று நடப்பட்டது! அதில் அவனது பீடு பொறிக்கப்பட்டது :

"...ஸ்ரீ அரிமிதைய மாவலி வாணராயர்......
அவர்க்குத் தாநாகிப் பிள்ளாய்கொண்டுள் புகுந்து
வஞ்சித்து நாடுகொண்டா னுளம்பன்
அவர் போரிற்றுஞ்சின பின்னைத் தேவிமார் கருப்பிணி
யருளராக அவளைக்காத்திருந் தாண்பிள்ளைப் பெறுவதுந்
தகடூர் புகுந்து நுளம்பன் பலத்தோடே துணிந்து
நாடு பாவிநார் சங்கரகுட்டியார் அவரோடுடன் புகுந்து
தகடூரில் பட்டார் நாகந்தை சிறுகுட்டியார் கல்நாடு"[140]

முன்னோர் நினைவாக மருத்துவச் சாலை :

தம் முன்னோர் நினைவக்கறிகுறியாக மருத்துவச்சாலை முத-லியவற்றை அமைப்பது உண்டல்லவ ? இச்செயலைப் பற்றியும் கல்வெட்டுக் கூறுகின்றது : முதல் இராசராசசோழனின் தமக்-கையாராகிய குந்தவைப்பிராட்டியார் தம் தந்தை சுந்தர சோழ-னின் நினைவாகத் தஞ்சை மாநகரில் கி பி. 1015-இல், ' சுந்தர சோழ விண்ணகர் ஆதுரசாலை' என்ற இலவசமருத்துவநிலையம் ஒன்றை நிறுவினர். பண்டாரவாடையில் உள்ள முதலாம் இரா-சேந்திரனின் 3-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இவ் ஆதுர-சாலையை நடத்துதற்கென, 70 காசுகள் கொடுத்து, 9 மாநிலம் இறையிலியாக வழங்கியதைக் குறிப்பிடுகின்றது இம் மருத்துவ நிலையத்தில் இருந்த மருத்துவரின் பெயர், 'சவர்ணன் அரையன் மதுராந்தகன்', என்பது.[141] இம் மருத்துவச் சாலைக்கு விடப்பட்ட வைத்திய போகம் போதாமை கண்டு இப்பிராட்டியார் மேலும் பல மனைகள் வாங்கி விட்டதாகவும், முன் அளித்த நிலத்தையும், இப்போது அளித்ததையும், சவர்ணன் அரையன் மதுராந்தக-னும், அவனின் வழியினரும் அநுபவிக்கலாம் என்றும், இங்ஙனம் பழையாறையில் உள்ள தன் அரண்மனையிலிருந்து ஆணை பிறப்பித்தார். இச்செய்தியை மற்றொரு கல்வெட்டு அறிவிக்-கின்றது.[142]

மந்திரச்சொல் :

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி''க்கு 'மந்திரம்' என்று பெயர்.[143] இத்தகு மாந்தர்பலர் நம் தமிழகத்தே வாழ்ந்து வந்தனர் அவர்களுள் ஒருவன் அரிகேசரி பராக்கிரம பாண்டியன். தென்காசியில், சிவபெருமானுக்கென்று பெருங் கோயிலை எழுப்பி, அதன் நாள்வழிபாட்டிற்கும் திருவிழாக்-களுக்கும் அளவிறந்த நிலங்களை வாரி வழங்கினன். இவன், இத்திருக்கோயிலைக் கட்டுவதற்கு மேற்கொண்ட செயல்களைக் குறித்துக் கல்வெட்டுக்கள் விரிவாகப் போற்றுகின்றன. சிவ-பெருமான் திருவுருவத்தை எழுந்தருளச் செய்து, குடமுழுக்-காட்டி மேலும் பல பணிகளைத் தொடங்கிய அவன், இக்-கோயிலைப் பாதுகாப்பதில் தனக்குப்பின் வருபவர்களும் முயற்சி

எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கருதினன். அப்போது அவன் பாடிய பாடல்கள், தென்காசிக் கோபுரச் சுவர்களில் வெட்டப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று :

"ஆராயினு மிந்தத் தென்காசி மேவும்பொன் னுலயத்து
வாரா தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வேயொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன்ப ராக்கிரம பாண்டியனே"[144]

"இந்தத் தென்காசியில் உள்ள திருக்கோயிலில், வரத்தகாததொரு குற்றம் வந்தால், யாரேனும் அப்போது இங்கு வந்து, அக் குற்றத்தை நேரான வழியில் நீக்கி, இதனைப் பாதுகாப்பாராயின், அன்னுரை, இப்போதே பாரோர் அறிய நீதியுடன் பணிந்தேன்!" என்று பாடும் இப் பாண்டியனின் வாக்குப் பிற்காலத்தே மெய்யாகி விட்டது! தென்காசிக் கோபுரம் இரண்டாகப் பிளந்து விட்டது! என்னே விந்தை!

கல்வெட்டுக்கள், இத்தகைய சுவையான—உள்ளத்தை உருக்குகின்ற செய்திகளையும் தெரிவிக்கின்றன. தேடினுல் இன்னும் பல கிடைக்கும்!



# 9

## கல்வெட்டுக்களில் 'தமிழ்'

தமிழகத்திற் காணப்படும் கல்வெட்டுக்களில் 'தமிழ் எழுத்து', 'வட்டெழுத்து', 'கிரந்த எழுத்து', 'நாகரி எழுத்து' ஆகியன அமைந்துள்ளன என்பர் அறிஞர்.[145] ஆயினும் பெரும்பாலானவை தமிழ்மொழியின்கண் உள்ளன என்று அறியும்போது மகிழ்ச்சி தோன்றுவது இயற்கையே! இது குறித்து ஒருசில காண்போம்.

தமிழ்நடை:

> "தமிழ்நாட்டில் இதுகாறும் கிடைத்துள்ள மிகப் பழைய கல்வெட்டுக்கள் அனைத்தும் தமிழ்மொழியிலேயே உள்ளன ...... கி. மு. மூன்றும் நூற்றுண்டு தொடங்கித் தொடர்ந்து இன்றுவரை கல்வெட்டுக்கள் தமிழில் காணப்படுகின்றன!"

என்று கூறுவர் நடன, காசிநாதன்.[146].

பண்டையத் தமிழ்க் கல்வெட்டுக்களில் பெரும்பாலும் பேச்சு வழக்கு இடம்பெற்றுள்ளது. கி. பி. 8-ஆம் நூற்றுண்டிலிருந்து இலக்கிய நடையில், கவிநயத்துடன் சில கல்வெட்டுக்கள் எழுதப்பெற்றுள்ளன. தமிழ்மொழியில் புலமை-

பெற்ற பாவாணர்களால் 'மெய்க்கீர்த்தி' பாடப்பட்டது என்று தெரிய வருகின்றது. இதற்கு வழிகோலிய பெருமை முதலாம் இராசராசனுக்கே உரியது. இவனுக்குப் பின்வந்தோரும் இவன் கொண்ட முறையைப் பின்பற்றினர்.

"விளைப்பந் தூறுடை வளைப்பந் தூறும்
கலைத்தக் கோர்புகழ் கலைத்தக் கோலமும்"[147]

என்ற முதலாம் இராசேந்திர சோழனின் மெய்க்கீர்த்தியில் எதுகை நயம் அமைந்து நடைசிறக்கக் காண்கின்றோம்.

சோழர்களைப்போலவே பாண்டியர்களின் கல்வெட்டுக்களி-லும் பாநடை அமைந்துள்ளது காணலாம் :

"சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணமுடி சூட்டி
விழாவணி நடாத்தி வீரைப்புன லாடல்
வழாவகை நடாத்தநின் மன்னருள் தன்னால்"[148]

என்பது அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் மெய்க்கீர்த்தி. இதில் 'மோனைத் தொடை' அமைந்து நிற்றல் காணலாம்.

நடுகல்லில் தமிழ்ப்பா :

நடுகற்களிற்கூடத் தமிழ்ப்பாவில் பாடப்பட்ட கல்வெட்-டுக்கள் காணப்படுகின்றன. சான்றுக்கு ஒன்று கூறலாம் : கோவை மாவட்டம் 'பழங்கலம்' என்ற ஊரில் ஒரு நடுகல் உள்-ளது. இது 'வேடன் கோயில்' என வழங்கப்படுகின்றது. இதில், வீரனின் உருவம் கையில் குறுவாள் ஏந்தி நின்றுனாக, உள்ளே பின் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. அவ்வீரனின் பீடு குறித்த பாடல் வருமாறு :

"வாய்த்தபுகழ் மங்கலத்து வந்தெதிர்த்த மாற்றலரைச்
சாய்த்தமகன் வென்ற சயம் பெருக

நீக்குவனம் கற்பொறிக்கப் பட்டான் கரடிகுலச்
சொக்கனே நந்தலே உலகிற் காண''[149]

— இது, ஏறத்தாழக் கி. பி. 13, 14 - ஆம் நூற்றுண்டைச் சார்ந்தது என்பர்

**தமிழ்ப் புலவர்கள் :**

எண்ணற்ற தமிழ்ப் புலவர்களின் பெயர்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. அவர்கள் இயற்றிய நூல்களும், பாக்களும் பலப்பல.

கி. பி. 6 அல்லது 7-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த பெரும்பிடுகு முத்தரையன் என்ற சிற்றரசனைப் 'பாய்ச்சில் வேள் நம்பி', 'ஆசாரியர் அநிருந்தர்', 'கோட்டாற்று இளம்பெருமானுர்', 'குவாவங்காஞ்சன்' என்ற நான்கு புலவர்கள் பாராட்டிப் பாடியுள்ளனர். அப் பாடல்கள் திருச்சியை யடுத்த செந்தலை என்ற ஊரில் உள்ள சிவன் கோயிற் கல்வெட்டுக்களிற் காட்சியளிக்கின்றன.

கி- பி. 9-ஆம் நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்த அபராஜித வர்மபல்லவன், திருத்தணிகை வீரட்டானேசுவரர் கோயிலில் பாடிய வெண்பா, கல்வெட்டாகக் காட்சியளிக்கின்றது.[150]

பாண்டியர் காலத்தில் முத்தமிழ்ப் புலமைபெற்ற சிறந்த அறிஞர்களுக்குத் 'தமிழவேள்' என்ற பட்டம் அளிக்கப்பட்டதாகக் கல்வெட்டின் மூலம் தெரிய வருகின்றது. மதுரை மாவட்டம் கீழ்மாத்தூர் என்ற ஊரில் காணப்படும் கல்வெட்டில் 'தமிழவேள்' என்று ஒருவர் குறிக்கப்படுகிருர். அவர் முத்தமிழிலும், வேதம், புராணம், பாதஞ்சல முதற்பனுவல் ஆகிய நூல்களிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர் என்று கூறுகின்றது.[151]

மாறவர்மன் சுந்தரபாண்டியனுடைய அவைக்களப் புலவராக இருந்தவர் காராணை விழுப்பரையர்.[152]

கி பி. 16-ஆம் நூற்றுண்டில் கிருஷ்ண தேவராயர் காலத்தில், 'ஆற்றுவான்பாடி வித்துவான்களில் திருவெங்கலநாதர் மகன் வடமலையார்' என்பவருக்கு நிலம் தானமாகக் கொடுக்கப்பட்டது எனத் தேவிகாபுரத்துக் கல்வெட்டுக் கூறுகின்றது.[153]

**அரிய தமிழ்ச் சொற்கள் :**

தூய, இனிய, அரிய தமிழ்ச் சொற்கள் பலவற்றையும் கல்வெட்டுக்களிற் கண்டு களிக்கலாம். எடுத்துக்காட்டாகச் சில சொற்கள் :

குலங்கிழார்கள், பொலியூட்டல், ஒற்றியிடல், தூக்குத்தலரிசி, இறைகாவல், மண்டலம், வளநாடு, கோட்டம், கூற்றம், மங்கலம், கழனிக்கோல், குண்டில், குறி, கணக்கன், ஆடவல்லான், பெருவழி, பணிமகன், பிடாரர், கொட்டிமத்தளம், திருவாய்மொழிதல், திருப்பதியம், மணவாட்டி, திருநந்தாவிளக்கு, திருமந்திரஓலை, திருவாய்க் கேள்வி, இறை(நிலவரி), கரம்(குடிவரி), குடிநீங்காக்காணி, விழுக்காடு, மீசு, காணிக்கடன், கடமைச்செலவு, படிச்செலவு, திருமேனி, திருக்கற்றளி, அக்கன்,யாண்டு, திருப்பட்டம், தலைமாறு, அடுத்தமுறை, தென்சிறகு, கானபாடி, வங்கியம், காவிதி, நீர்த்தெளியான், பண்டாரி, மாணி, கரணத்தார், ஆட்டைவட்டன், மெய்காப்பார், பேரால், தனியூர், புறமண்டலம், ஊர்நத்தம், கணி முற்றூட்டு, மரூத்துவப்பேறு, திருவடிகள், திருமுற்றம், திருநந்தவனம், கொட்டாரம், காராண்மை, மீகாட்சி, பெருந்தரம், அக்கம், பொக்கணம், அங்காடி[154] – இப்படி எத்தனையோ பல அரிய தமிழ்ச் சொற்களை அடுக்கிக் கொண்டே போகலாம்!

'ஊராட்சி, நகராட்சி, மாநகராட்சி' முதலான அலுவலகங்களில் கல்வெட்டிற் காணப்படும் இவைபோன்ற சொற்களைப் பயன்படுத்தலாமல்லவா?



# 10

## முடிவுரை

இதுகாறும் கல்வெட்டுக்களின் தோற்றமும் வளர்ச்சியும் அறிந்தோம்; கல்வெட்டுக்களில் மன்னர்களின் மாண்பினை உணர்ந்தோம்; சமயங்களின் சீர்மைதனைத் தெரிந்தோம்; ஊர்ச்சபைகளின் உயரிய தொண்டினைக் கண்டோம்; தமிழ் இலக்கியங்களின் தன்னேரிலாத் தகவினைப் படித்தோம்; அளவைகள், அணிகலன்கள் ஆகியவற்றின் அழகினை நுகர்ந்தோம்; சுவையான செய்திகளைச் சுந்தரத் தமிழில் சுவைத்தோம்; தமிழ் நடையினைக் கண்டு களிகூர்ந்தோம்!

இன்னும் பல கல்வெட்டுக்களை நாம் படிப்போமானல் அரிய முத்துக்களைக் கொண்டுவந்து தமிழன்னைக்குச் சூட்டி மகிழலாம்! 'கல்வெட்டு - ஓர் அரிய கருவூலம்! அதன்கண், மேலே குறித்த அத்துணைச் செம்வங்கள் மட்டுமல்ல, மேலும்பல செல்வங்களை அள்ளிக் கொண்டு வரலாம். வருக! கருவூலம் காண்க! கண்டு மகிழ்வு கொள்க! பிறர்க்கும் வாரிவழங்குக!

வாழ்க தமிழ்!



## சான்றெண் விளக்கம்

1. திருக்குறள் : 1
2. தொல்காப்பியம் : பொருள் : உவமவியல் முன்னுரை- இளம்பூரணம்.
3. திருக்குறள் : 1 பரிமேலழகர் உரை
4. தொல் : எழுத்ததிகாரம் : 1
5. திருக்குறள் : 392
6. புறநானூறு : 9
7. புறநானூறு : 65 66 (உ. வே. சா. பதிப்பு)
8. கம்பராமாயணம் : யுத்த : முதற்போர் : 255
9. தொல். புறத் : 5
10. புறப்பொருள் வெண்பாமாலை : வாகை : 22
11. புறப்பொருள் : பொது : 12
12. அகநானூறு : 67
13. புறநானூறு : 264
14. திருக்குறள் : 771
15. திருவாரூர் மும்மணிக் கோவை :
16. 'நால்வர்', கல்வெட்டியல், அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1972, பக். 136.
17. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை., கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள், மணிவாசகர் நூலகம், 1977, பக். 10.
18. தங்கையா நாடார், வ. (பதி) தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள், கழகம், 1963, பக். 9

19. காசிநாதன், நடன, கல்வெட்டின் கதை, த. அ. தொல்-பொருள் ஆய்வுத்துறை, 1969, பக். 8.
20. 'நால்வர்', கல்வெட்டியல், (மு. கு.) 1972, பக். 8.
21. ஷை, பக். 34.
22. S. I. I. Vol. III Part I No. 4 p. p. 6-8
23. சுந்தரம், வெ, கல் சொல்லும் கதைகள், அசோகன் பதிப்பகம், சென்னை, 1972, பக். 83.
24. Pudukottai States Inscriptions, No. 438, p. 308.
25. தொல்காப்பியம் : புறத் : 30.
26. Pudukkottai State Inscriptions, No. 260, p. p. 145, 146.
27. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை, கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள், (மு. கு.) பக். 14.
28. Epigraphia Indica, Vol. VIII No. 29, p. p. 290-296.
29. 'நால்வர்', கல்வெட்டியல், (மு.கு.) பக். 42.
30. காசிநாதன், நடன, கல்வெட்டின் கதை, (மு.கு.) பக். 6.
31. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை. கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள், (மு கு.) பக். 15.
32. 'நால்வர்', கல்வெட்டியல், (மு.கு.) பக். 53.
33. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை. கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள், (மு.கு.) பக் 15.
34. காசிநாதன், நடன, கல்வெட்டின் கதை. (மு கு.) பக். 6.
35. தொல்காப்பியம் : செய்யுளியல் : 75.
36. பன்னிருபாட்டியல் : 110
37. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை, பிற்காலச் சோழர் சரித்திரம், அ. ப. கழகம், 1974, பக். 93.
38. ஷை, பக். 98.

39. S. I. I. Vol. II, Part, III, No. 65, p. p. 2-259

40. S. I. I. Vol. II No. 67

41. ,, Vol. I No. 67, p, p. 95-99

42. ,, Vol. II, Part, I No. 20, p. p. 105-109.

43. ,, ,, ,, , No. 28, p. p. 57-58.

44. ,, Vol. III, Part No. I. No. 29, p. p. 58 - 64.

45. Epigraphia Indica, Val. xxv, p. 263 & S. I. I. Vol. VII No. 887.

46. S. I. I. vol. II, Part II, No.58, p.p. 299-326.

47. S. I. I. vol. V. No. 673.

48. do No. 458.

49. do Ins. No. 158 of 1925.

50. do 159 of 1925.

51. do 97 of 1928.

52. do 269 of 1911.

53. do 128 of 1930.

54. S. I. I. vol. II Part III, No. 68, p.p. 307-312.

55. Pudukkottai State Inscriptions, No. 246, p. p. 136-137.

56. do No. 250, p.p. 139-140.

57. Archaeological Survey of India, 1904-5, p. p. 131.

58. S. I. I. vol. VI, No. 362 & A. R. E. for 1916 p. 116.

59, 3-ஆம் இராசராச சோழனின் திருச்செய்ஞலூர்க் கல்வெட்டு.

60. Ins, 500 of 1925.

61. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை, பிற்காலச் சோழர் சரித்திரம், (மு. கு.) பக். 508.

62. காசிநாதன், நடன, தொல்லியல், சேகர் பதிப்பகம், சென்னை, 1977, பக். 64.

63. ஷ. பக். 69–70.

64. S. I. I. vol. III, No. 180.

65. சதாசிவப்பண்டாரத்தார், தி. வை, பிற்காலச் சோழர் சரித்திரம், (மு. கு.) பக். 516-17.

66. Ins. 556 of 1919.

67. Ins. 620 of 1909.

68. Ins. 336 of 1925.

69. S. I. I. vol. VI, Nos. 50&58.

70. தொல்காப்பியம் : அகத் : 5.

71. Ins. 222 of 1911 & 149 of 1928.

72. Ins. 277 of 1930 & 695 of 1916.

73. Ins. 449 of 1902 etc.

74. இராசமாணிக்கனர், மா, கல்வெட்டுக்களில் அரசியல் சமயம் சமுதாயம், சேகர் பதிப்பகம், 1977, பக்.76.

75. S.I.I. Vol I. Kuram Grant.

76. Ins. 152 of 1916.

77. S.I.I. Vol. 3, p.94.

78. இராசமாணிக்கனர், மா, கல்வெட்டுக்களில் அரசியல், சமயம் சமுதாயம் (மு.கு.) பக். 65.

79. Ins-158 of 1912.

80. Ins-158 of 1912 & 161 of 1912.

81. சதாசிவப்பண்டாரத்தார், தி,வை, பிற்காலச் சோழர் சரித்திரம், (மு.கு.) பக். 542 3.

82. இராசமாணிக்கனார், மா, கல்வெட்டுக்களில் ... (மு.கு ) பக்.53

83. ஷை பக். 53-54.

84. ஷை பக்.63.

85. Ins. 433 of 1905.

86. Ep. Indica Vol. IX No. 10.

87. do-Vol. xxi No. 17.

88. சாம்பசிவனார், ச, கல்வெட்டுக் காவலன், வளவன் வெளியீடு, 1975, பக். 109 - 115.

89. S, 1. 1. vol. IV, No. 225.

90. சதாசிவப்பண்டாரத்தார், தி. வை, கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள், (மு. கு.) பக். 73.

91. குப்புசாமி, சு, வரலாற்று வடிவங்கள், சேகர்பதிப்பகம், சென்னை, 1976, பக். 45.

92. காசிநாதன், நடன; தாமோதரன், கு, கல்வெட்டு-ஓர் அறிமுகம், த. அ. தொ. பொ. ஆ. துறை, 1973. பக். 78.

93. வேங்கடராமையா, கா. ம, கல்லெழுத்துக்களில், பாரி-நிலையம், சென்னை, 1966, பக். 23 – 24.

94. ஷை, பக். 34.

95 'நால்வர்', கல்வெட்டியல், (மு. கு.) பக்.63.

96. Epi. Indica, vol. VIII. No. 29, p, p. 290 - 296.

97. S. I. I. vol. III, Part III. No. 106, p. p. 239-242.

98. S. I. I. vol. II, Part I, No. 28, p. p. 57-58.

99. வேங்கடராமையா, கா. ம, கல்லெழுத்துக்களில்; (மு. கு.) பக். 19 - 20.

100. ஷை, பக். 49.

101. காசிநாதன், நடன, தாமோதரன், கு, கல்வெட்டு - ஓர் அறிமுகம், (மு. கு.) பக். 81 - 84.

102. 'நால்வர்', கல்வெட்டியல், (மு. கு.) பக். 49, 50.

103. நன்றி 'தினமணி' நாளிதழ், மதுரை.

104. காசிநாதன், நடன., தாமோதரன், கு, கல்வெட்டு - ஓர் அறிமுகம், (மு. கு.) பக். 62.

105. ஷை, பக். 42.

106. S. I. I. vol. I No. 67, p. p. 95 - 99.

107. சங்க இலக்கியம், பாரி நிலையம், சென்னை, 1967.

108. காசிநாதன், நடன., தாமோதரன், கு, கல்வெட்டு - ஓர் அறிமுகம், (மு. கு.) பக். 60.

109. ஷை, பக். 34, 35.

110. புறநானூறு : 91.

111. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை, இலக்கியமும் கல்வெட்டுக்களும், மணிவாசகர் நூலகம், 1977, பக். 108.

112. புறநானூறு : 118.

113. ஷை : 200.

114. சதாசிவப் பண்டாரத்தார், தி. வை, இலக்கியமும் கல்வெட்டுக்களும், (மு. கு.) பக். 112.

115. சிலப்பதிகாரம் : 28 : 74 - 77.

116. Ins. 250 of 1926.

117. பெரிய புராணம் : பெருமிழலை : 1.

118. ஷை : திருஞான : 205.

119. காசிநாதன், நடன, கல்வெட்டின் கதை, (மு. கு.) பக் 14.

120. பெரிய புராணம் : மெய்ப்பொருள் : 1

121. S. I. I. vol. II, Part II, No. 40, p. p. 166 - 169.

122. பெரிய புராணம் : மெய்பொருள் : 16.

123 காசிநாதன், நடன கல்வெட்டின் கதை, (மு. கு.) பக். 13.

124. தொல்காப்பியம் : புறத். 4, 5.

125. புறப்பொருள் வெண்பா மாலை - வெட்சி : 9; கரந்தை : 6.

126. காசிநாதன், நடன., தாமோதரன், கு, கல்வெட்டு - ஓர் அறிமுகம், (மு. கு.) பக். 65.

127. ஷை ,, பக். 66.

128. ஷை, பக். 44.

129. காசிநாதன், நடன, கல்வெட்டின் கதை, (மு.கு.) பக் 13.

130. S.I. I Vol. II, Part I, No. 7, p. p. 77—84.

131. S. I. I Vol. II, Part II, No. 40, p. p. 166 - 169.

132. Pudu. State Ins., No 250, p. p. 139 - 140.

133. do No. 260, p p. 145 - 146.

134. S. I. I. Vol. II, Part I, No. 7, p. p. 77 - 84.

135. நாலடியார் : 213

136. காசிநாதன், நடன., தாமோதரன், கு, கல்வெட்டு ஓர் அறிமுகம், (மு. கு.) பக் 43.

137. குப்புசாமி, சு, வரலாற்று வடிவங்கள், (மு. கு.) பக்.37.

138. ஷை, பக். 155.

139. காசிநாதன், நடன., தாமோதரன், கு, கல்வெட்டு-ஓர் அறிமுகம், (மு. கு.) பக். 45.

140. ஷை. பக். 46.
141. Ins. 248 of 1923.
142. Ins. 249 of 1923.
143. தொல்காப்பியம் : செய்யு : 171.
144. T. A S. Vol. I, No. III., p.p. 95 – 98.
145. 'நால்வர்', கல்வெட்டியல்.
146. காசிநாதன், நடன, கல்வெட்டின் கதை, (மு. கு.) பக்.7.
147. S. I. I. Vol. II, Part I, No. 20, p. p. 105 - 109.
148. Pudu. S. Ins., No. 260, p. p. 145 – 146.
149. காசிநாதன், நடன., தாமோதரன், கு, கல்வெட்டு - ஓர் அறிமுகம், (மு. கு.) பக். 46.
150. இராசமாணிக்கனார், மா, கல்வெட்டுக்களில். (மு.கு) பக். 110.
151. 'நால்வர்', கல்வெட்டியல், (மு. கு.) பக். 89.
152. M E. R. 1927 - 8, p. 47.
153. இராசமாணிக்கனார், மா, கல்வெட்டுக்களில் ... (மு.கு.) பக். 152.
154. சாம்பசிவனார், ச, கல்வெட்டுக் காவலன், (மு. கு.) பக். 124 - 125.

---

**பிழை திருத்தம்**

பக்கம் 5 - இல், 23 - ஆவது வரியில் வரும் 'கோப்பெருஞ்சோழன் வரலாறு நாமறிந்ததே' என்பதைச் 'சேரமான் பெருஞ்சேரலாதன் வரலாறு நாமறிந்ததே' என்று திருத்திக் கொள்ளவும்.